# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி: 71231

விவரங்களுக்கு:

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி 62 | செப்டம்பர்—1982 | இதழ் 9 |
|---|---|---|

பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

தொகுதி 62 | துந்துபி ௵ புரட்டாசி ㎡ | இதழ் 9

## பிரார்த்தனை

अदितिं च दितिं दीप्तां वसुधां वसुधारिणीम् ।
नमामि कमलां कान्तां कामां क्षीरोदसम्भवाम् ।

அதிதிம் ச திதிம் தீப்தாம் வஸுதாம் வஸு-தாரிணீம் |
நமாமி கமலாம் காந்தாம் காமாம் க்ஷீரோத-ஸம்பவாம் ||

—லக்ஷ்மீ அஷ்டோத்தரசதநாம ஸ்தோத்திரம்

அதிதி என்ற தேவியாகவும், திதி என்ற தேவியாகவும், ஒளிபொருந்தி வளமளிக்கும் பூமியாகவும் விளங்கி, செல்வத்தைத் தாங்குகிறவளும், விரும்பியவற்றை அளிப்பவளும், பாற்கடலில் உதித்தவளும், பேரழகியுமான திருமகளை வணங்குகிறேன்.

இன்னும் பற்பல நாளிருந் தாலும்,
இக்க ணந்தனி லேயிறந் தாலும்,
துன்னும் வான்கதிக் கேபுகுந் தாலும்,
சோர்ந்து மாநர கத்துழன் றாலும்,
என்ன மேலுமிங் கெனக்குவந் தாலும்,
எம்பிரா னெனக்கு யாதுசெய் தாலும்,
நமச்சி வாயத்தை நான்மற வேனே.

—வடலூர் வள்ளலார்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஞாயிறு, செப்டம்பர் 28, 1884**

நவராத்திரி விழாவில் இன்று மகா அஷ்டமி தினமாகும். ஸ்ரீகுருதேவர் துர்க்காதேவியின் விக்கிரகத்தைத் தரிசிக்கும்பொருட்டுக் கல்கத்தா வந்திருக்கிறார். ஆதருடைய வீட்டில் நவராத்திரியை முன்னிட்டு, சாரதீய துர்க்கா உற்சவம் நடைபெறுகிறது. குருதேவரை அவர் அந்த உற்சவத்தின் மூன்று நாட்களுக்குமே தமது வீட்டுக்கு வருகை தருமாறு அழைத்திருந்தார். ஆதர் வீட்டுக்குச் சென்று, தேவியின் விக்கிரகத்தைத் தரிசிப்பதற்கு முன்பு, குருதேவர் ராம் பாபு என்ற பக்தரின் வீட்டுக்குச் சென்றிருந்தார். ராம்பாபுவின் வீட்டில் விஜயர், கேதார், ராம்பாபு, சுரேந்திரர், சுனிலால், நரேந்திரர், நிரஞ்ஜன், நாராண் (நாராயணர்), ஹரீசர், பாபுராம், ம— உட்படப் பல பக்தர்கள் குழுமியிருந்தனர். பலராமும் ராக்காலும் இன்னும் பிருந்தாவனத்திலேயே க்ஷேத்திரவாசம் செய்து வந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்னகை ததும்ப விஜயரையும் கேதாரையும் பார்த்து) : இன்று பிரிந்திருந்தவர் மீண்டும் சந்தித்திருக்கும் ஒரு நல்ல நாளாகும். நீங்கள் இருவரும் ஒரேவிதமான ஆன்மிக மனப்பான்மை கொண்டவர்களாக இருக்கிறீர்கள். (விஜயரைப் பார்த்து) : அது சரி, சிவநாத்தின் விஷயம் என்ன ஆயிற்று? நீங்கள் அவரை—?

விஜயர் : ஆம், சுவாமி. தாங்கள் அவரது வீட்டுக்கு எழுந்தருளியிருந்தீர்கள் என்ற செய்தியை அவர் கேள்விப்பட்டார். நான் அவரை நேரில் பார்த்துப் பேச முடியவில்லை. ஆனால் விவரத்தை அவருக்குச் சொல்லியனுப்பிவிட்டேன். அவரும் செய்தியைக் கேள்விப்பட்டிருப்பார்.

நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரின் எதிரில் அமர்ந்திருந்தார். அவருக்கு இப்போது வயது சுமார் இருபத்திரண்டு இருக்கும். மேற்கண்டவாறு ஸ்ரீராமகிருஷ்ணர் உரையாடிக்கொண்டிருந்தபோது அவரது பார்வை தமது அன்புக்கு உரிய நரேந்திரர் மீது விழுந்தது. நரேந்திரரைப் பார்த்ததும் திடீரென்று குருதேவர் எழுந்து நின்று சமாதிநிலையில் ஆழ்ந்துவிட்டார். அவர் தமது ஒரு திருவடியை நரேந்திரரின் முழங்காலின் மீது வைத்தார். அவர் அதே நிலையில் நின்றுகொண்டே ஆழ்ந்த தெய்விகப் பரவச நிலையில் லயித்திருந்தார். புற உலகம் பற்றிய நினைவு அறவே அவரை விட்டு அகன்றுவிட்டது. அவரது கண்களும் இமைக்காமல் அப்படியே நின்றுவிட்டிருந்தன.

நீண்ட நேரம் கழிந்தபிறகு அவருக்குச் சமாதி நிலை கலைந்து சிறிது சிறிதாகப் புற உலக நினைவு வந்தது. ஆனால் அப்பொழுதும் தெய்விகப் பரவசம் அவரை விட்டு முற்றிலும் நீங்கியபாடில்லை. அவர் தமக்குத் தாமே ஒரு குடிகாரனைப் போலப் பேசிக்கொண்டார். தெய்விக ஆவேசத்தில் ஆழ்ந்தபடியே இறைவனுடைய திருநாமத்தை அவர் திரும்பத் திரும்ப உச்சரித்தார். அந்த நிலையில் இருந்தபடியே மேலும் அவர் சொன்னதாவது : சச்சிதானந்தம்! சச்சிதானந்தம்! சச்சிதானந்தம்! — இதை நான் சொல்லலாமா? இல்லை. இன்று ஜகன்மாதாவுக்கு உரிய திருநாளாகும். ஆதலால் இன்றைய தினம் காரணானந்ததாயினி! காரணானந்ததாயினி! (தெய்விக போதை அருள்பவள்) என்று அல்லவா சொல்ல வேண்டும்! தாயே! பேரானந்த போதையே வடிவெடுத்தவளே! ஸ, ரி, க, ம, ப,

த, நீ என்ற வரிசையில் நீ என்ற ஓசையில் குரலை நீண்ட நேரம் வைத்திருப்பது நல்லதல்ல. நீண்ட நேரம் அதில் குரலை வைத்திருக்கவும் முடியாது. அதற்குக் கீழுள்ள ஒரு ஸ்வரத்திலேயே என் குரலை நான் வைத்திருப்பேன்.

ஸ்தூலம், சூட்சுமம், காரணம், மகாகாரணம் —இவ்விதம் பலவித ஞானபூமிகள் இருக்கின்றன. மகாகாரண நிலைக்குப் போகிற ஒருவன் பேச்சற்று மௌனத்தில் நிலைத்திருக்கிறான். ஒரே ஒரு சொல்கூட அவனால் பேச முடியாது.

ஈசுவரகோடியான ஒருவர் மகாகாரண நிலையை எட்டிவிட்டு, அந்த நிலையிலிருந்து மீண்டும் கீழான நிலைகளுக்கு இறங்கி வர முடியும். அவதார புருஷர்களும் ஈசுவரகோடிகளும் இவ் விதம் செய்ய வல்லவர்கள். அவர்களால் ஞான பூமிகளில் மேல்நோக்கிப் போகவும் முடியும், கீழ்நோக்கி இறங்கி வரவும் முடியும். மாடியின் மேல்தளத்துக்கு அவர்கள் ஏறிப்போகிறார்கள்; மீண்டும் படிக்கட்டின் வழியாகத் தரைமட்டத்துக் கும் கீழே இறங்கி வருகிறார்கள். இவ்விதம் மேல் நோக்கிச் செல்லுவதும் கீழிறங்கி வருவதும் அவர்களுக்கு முற்றிலும் சாத்தியம். பரப்பிரம் மத்தை அடைய முயலும்போது இந்த உலகம் அநித்தியம் என்று அவர்கள் புறக்கணித்து ஒதுக்குகிறார்கள். பரப்பிரம்மத்தை அடைந்த பின்பு அவர்கள் மனம் வியாவகாரிக நிலைக்குக் கீழே இறங்கி வரும்போது பரப்பிரம்மமே இந்த உலகமாகவும் இருப்பதை உணர்கிறார்கள். இது அனுலோமம், விலோமம் என்பதாகும். ஓர் அரசனுக்கு ஏழு அடுக்கு மாளிகை ஒன்று இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். பிறர் அந்த மாளிகைக்குள் வந்தால் கீழே உள்ள சில மாடிகள் வரையில்தான் சென்று அங்குள்ள மண்டபங்களைக் காண முடியும். அவ்வளவு தூரத்திற்குத்தான் அவர்களால் செல்ல இயலும். அவற்றுக்கும் மேலே உள்ள தளங்களுக்குப் போக அவர்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள். ராஜ குமாரனுக்கோ மாளிகை முழுவதுமே சொந்த மாக இருக்கிறது. அவன் அந்த மாளிகையின் ஏழு தளங்களுக்கும் மேலும் கீழுமாக எந்தத் தளத்திற்கு வேண்டுமானாலும் போவதும் வருவதும் இயலும். ஆகாயத்தில் மேலே போகிற ஒருவகை வாணம் இருக்கிறது. அது மேலே போகிறபோது பிரகாசம் வாய்ந்த ஒரு

> மெய்ம்மை அற்றதிலிருந்து மெய்ம்மைக்கு என்னை அழைத்துச் செல்; இருளிலிருந்து ஒளிக்கு என்னை அழைத்துச் செல்; மரணத்தி லிருந்து அழிவற்ற வாழ்க்கைக்கு என்னை அழைத்துச் செல்.
>
> —உபநிடதம்

விதமான நெருப்புப் பொறி அதிலிருந்து ஒரு சமயம் வெளியே வருகிறது. அடுத்துச் சற்று நேரம் வரையிலும் அந்த வாணம் எதையும் வெளிப்படுத்தாமல் மேல்நோக்கிப் பாய்கிறது. சிறிது நேரத்திற்குப் பிறகு மற்றொரு விதமான நெருப்புப் பொறியை அது சிந்துகிறது. மறுபடி யும் சிறிது நேரம் கழிந்தபிறகு இன்னொரு விதமான நெருப்புப் பொறியை அது வெளிப் படுத்துகிறது. எத்தனை எத்தனை வகைகளில் அந்த வாணம் நெருப்புப் பொறிகளை வெளிப் படுத்துகிறது என்பதற்கு ஓர் முடிவே இருப்ப தில்லை.

அந்த வாணத்திற்கு நேர்மாறாக மற்றொரு வகையைச் சேர்ந்த சாதாரண ஒரு வாணம் இருக்கிறது. அதில் நெருப்புப் பற்ற வைத்ததுமே ஒரேயடியாக, 'புஸ்' என்ற சத்தத்துடன் மேலே கிளம்பிச் சிறிது தூரம் சென்றவுடன் அணைந்தும் போய்விடுகிறது. சாதாரண ஜீவர்கள் இரண் டாம் வகையைச் சேர்ந்த புஸ் வாணம் போன்ற வர்கள். அவர்கள் கடுந்தவம் பழகிய காரணத் தினால் மேலேயுள்ள ஒரு ஞானபூமியைச் சென்றடைகிறார்கள். பிறகு அந்த ஞானபூமியி லிருந்து அவர்களால் கீழே இறங்கி வர முடியாது. எனவே அவர்கள் விவகார நிலைக்குத் திரும்பி வந்து தங்கள் ஆன்மிக அனுபவங்களைப் பற்றிய விவரங்களை உலகுக்குத் தெரிவிப்பது கிடையாது. கடுமையான ஆத்மசாதனைகளைப் பழகுவதன் மூலம் சாதாரண ஜீவன் ஒருவன் சமாதிநிலையை எய்துகிறான். ஆனால் அவன் அவ்விதம் சமாதி அடைந்தபிறகு மீண்டும் உலக விவகாரங்கள் அடங்கிய கீழ்நிலைக்குத் திரும்பு வதோ, தான் பெற்ற அனுபவங்களைத் தெரி விப்பதோ அவனால் இயலாது.

நித்திய சித்தர்கள் என்று சொல்லப்படும் மற்றொரு வகுப்பைச் சேர்ந்த பக்தர்கள் இருக் கிறார்கள். அவர்கள் பிறந்தது முதற்கொண்டே

பரிபூரணத்தில் நிலை பெற்றவர்களாகவும் பரம் பொருளையே நாடுபவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களின் மனம் உலக இன்பம் எதையும் ஒரு போதும் நாடுவதில்லை. வேதத்தில் ஹோமா என்ற ஒரு பறவையைப்பற்றிச் சொல்லப்பட்டி ருக்கிறது. அந்தப் பறவை ஆகாயத்தில் மிகமிக உயரத்தில் வசிக்கிறது. ஆகாயத்திலேயே அது முட்டையிடுகிறது. பறவை ஆகாயத்தின் மிகமிக உயரத்தில் இருப்பதனால் அந்த முட்டை கீழே விழுவதற்குப் பல நாள் ஆகிறது. அவ்விதம் தரையை நோக்கி வந்துகொண்டிருக்கும்போதே அந்த முட்டை பொரித்துக் குஞ்சு வெளிவரு கிறது. அந்தக் குஞ்சும் பல நாள் விழுந்து கொண்டே இருக்கிறது. அப்படி விழுந்துகொண் டிருக்கும்போதே அந்தக் குஞ்சுக்குக் கண்கள் திறந்துகொள்கின்றன. பூமிக்கு அருகில் வரும் போது அதற்கு உணர்வு வந்துவிடுகிறது. தரையில் போய் மோதினால் தனக்கு மரணம் ஏற்படும் என்பதை அது தெரிந்துகொள்கிறது. உடனே அது இனிய குரலில் கூவியபடியே தன் தாய் இருக்கும் இடம் நோக்கி விர்ரென்று மேல் நோக்கிப் பறந்து சென்றுவிடுகிறது. ஹோமாக் குஞ்சு தரையின் தொடர்பே தனக்கு மரணம் என்று கருதுகிறது. ஆதலால் தரையைப் பார்த்தாலே அது பயப்படுகிறது. இப்போது அதற்குத் தன் தாய்தான் வேண்டும். தாய்ப் பறவையோ ஆகாயத்தில் வெகு உயரத்தில் வசிக்கிறது. ஆகவே குஞ்சு மேல்நோக்கிப் பார்த்துக்கொண்டே வேறு எந்தத் திசையிலும் பார்வையைச் செலுத்தாமல் தாய் இருக்கும் இடத்திற்கு விரைவாகப் பறக்கிறது. அந்த ஹோமாப் பறவையைப் போன்றவர்கள் நித்திய சித்தர்கள். அவர்கள் உலக வாழ்க்கையில் எந்தவிதப் பந்தத்திற்கும் ஒருபோதும் உட்படுவ தில்லை. பரம்பொருளையே அவர்கள் நாடுபவர் களாக இருக்கிறார்கள்.

உலகில் அவதார புருஷராகப் பகவான் அவ தரிக்கும்போது அவரோடு நித்திய சித்தர்களும் உலகில் பிறக்கிறார்கள். அந்த நித்திய சித்தர் களுள் சிலருக்கு அதுவே கடைசிப் பிறவியாகும். அதன் பிறகு அவர்கள் மீண்டும் பிறப்பதில்லை.

## அன்னையின் அன்பு



அன்னை ஸ்ரீசாரதாதேவியார் தம்மை நாடி வரும் பக்தர்களுக்கெல்லாம் தயங்காமல் மந்திர தீட்சை தருவது வழக்கம். அவ்விதம் தீட்சை தந்தது காரணமாக அன்னையின் உடல்நலம் அடிக்கடி பாதிக்கப்பட்டது.

தீட்சை தந்ததனால் அன்னையார் தமது சீடர்களின் பாவங்களை ஏற்று உடல் எரிச்சலுக்கும் முடக்குவாதத்திற்கும் ஆளாகித் துன்பப்படுகிறார் என்பதை அறிந்து ஒரு பக்தர் மிகவும் மனம் வருந்தினார்.

அவர் ஒரு முறை அன்னையாரிடம், ''அம்மா! பக்தர் களின் பாவங்களை ஏற்றுக்கொள்வதன்மூலம் நீங்கள் கடுமை யான முடக்குவாதத்தால் துன்பப்படுவதைப் பார்த்து எனக்கு மிகுந்த வேதனையாக இருக்கிறது. நான் தங்களிடம் உள்ள முருகி ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன். என் காரணமாக நீங்கள் துன்பப்படவே கூடாது. என் வினைப்பயன் களுக்கானதுன்பம் முழுவதையும் நானே அனுபவிக்கும்படி எனக்கு அருள்செய்ய வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

இதைக் கேட்ட அன்னை அமைதியாக, ''மகனே! இது எப்படி முடியும்? நீ சொல்வதை என்னால் எப்படி அனுமதிக்க முடியும்? நீ சுகமாக இரு. உனக்காக என்னைத் துயரப்பட விடு'' என்றார்.

# நாம மகிமையும் ஜப விதியும்

சி. வி. சிவராமகிருஷ்ணன்

## முப்பத்திரண்டு எழுத்து மந்திரம்

''நாரதா! வைகுண்டத்திலோ, யோகியரின் இதயத்திலோ என்னைத் தேடாதே; நான் அங்கெல்லாம் இல்லை. என் பக்தர்கள் எங்கு என் நாம மகிமையை, கல்யாண குணங்களைப் பாடிக் களிக்கிறார்களோ அங்கே நான் அமர்ந் திருப்பேன்'' என்று பகவான் நாராயணன் நாரதரிடம் சொன்னாராம்.

'நாம ஜபம் கிடைத்தற்கரிய நிதி; நம்மை உய்விக்கப் பகவான் அருளிய கொடை' என்பதை உறுதியாக நம்ப வேண்டும்.

துவாபர யுகம் முடிந்த பிறகு ஒரு முறை நாரதர் பிரம்மலோகம் சென்று, ''கலியுகத்தில் மாயையின் கட்டிலிருந்து விடுபட மார்க்கம் என்ன?'' என்று பிரம்மாவிடம் வினவினார்.

அதற்கு, ''கலியில் நாம சங்கீர்த்தனமே ஒருவனுக்கு விடுதலையை வழங்கும்'' என்று பிரம்மா சொன்னார். அந்த நாமத்தைத் தமக்குச் சொல்லும்படி நாரதர் பிரம்மாவிடம் வேண்டினார்.

ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே |
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண
க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே ||

இந்த முப்பத்திரண்டு எழுத்து மந்திரத்தை வழங்கி, ''இது கலிதோஷத்தை விலக்கி, ஜபிப் பவனுக்கு விடுதலையை வழங்கும்'' என்று பிரம்மா பதில் சொன்னார்.

மனம் தூய்மையுறத் தூய்மையுற, ஜபத்தின் வாயிலாகச் சித்தியும் அதற்கேற்ப விரைந்து வரும்.

தீய சங்கல்பங்கள் என்றும், 'வாசனை' என்றும் சொல்லப்படும் நுட்பமான உணர்ச்சிப் பதிவுகளை யும், அடுக்கடுக்காக அகத்தே அமைந்துள்ள அழுக்குகளையும் மெல்ல மெல்ல நாம ஜபம் அகற்றிவிடுகிறது. இந்த அழுக்கு எவ்வளவு விரைவில் அகற்றப் படுகிறதோ அவ்வளவு விரைவில் ஜபத்தின் பலன் நமக்குச் சித்திக்கும்.

ஆனால் சாதகன் 'காலம் தாழ்கிறதே' என்ற தளர்ச்சியே காட்டக்கூடாது.

ராமபக்தி சாம்ராஜ்யத்தில் தம்மை மிக எளிய தொண்டராக அர்ப்பித்துக்கொண்டு காலமெல் லாம் ராமநாம சங்கீர்த்தனத்தில் உருகித் திளைத்த மகான் தியாகராஜர், ராமநாமத்தை நாளொன்றுக்கு 1,25,000 முறை ஜபித்து வந்தார் என்று அவர் வரலாறு சொல்லுகிறது. தமது முப்பத்தெட்டாவது வயதில் தொண் ணூற்றாறு கோடி ராமநாமத்தைச் சொல்லி, ஸ்ரீராமபிரானின் அருளையும் அழகுக் காட்சியை யும் பெற்றுப் புனிதமும் பூரணமும் பெற்ற வாழ் வாகத் தமது எளிய வாழ்வை மாற்றிக்கொண் டார் அந்த மகான்.

அந்த ஆனந்தத்தில்தான், ''ராமபக்தி சாம் ராஜ்யத்தை எய்திய புனிதனின் சந்திப்பே மிக மேலான ஆனந்தத்தைத் தரும்'' என்று மகான் தியாகராஜர் பாடுகிறார்.

மன அழுக்கற்ற அவருக்கே 96 கோடி நாமஜபம் தேவைப்பட்டதே. நம்மைப் போன்ற எளிய, அக அழுக்கு நிரம்பிய மனிதர் களுக்கு எத்தனை கோடி நாமஜபம் தேவைப்படும் என்பதை எண்ணிப் பார்த்துச் சலிப்பின்றிச் சித்தி பெறும்வரை ஜபத்தை உறுதியோடு கைக் கொள்ள வேண்டும்.

## நாம ஜப விதி

ஜபம் செய்ய விரும்பும் சாதகனுக்கு ஜப விதி முறைகள் சில சான்றோர்களால் விதிக்கப் பட்டுள்ளன. அவற்றை அறிந்து, வழுவாமல் கடைப்பிடிக்கும் சாதகன் தனது முயற்சியில் விரைந்து முன்னேற்றம் கண்டு, பலனை அதி சீக்கிரத்தில் பெற இயலும்.

ஜபயோக சாதனையில் ஈடுபடும் சாதகன் உடல் தூய்மையைத் தவறாமல் கருத்தில் கொள்ள வேண்டும்.

உடல்தூய்மை, உள்ளத்தூய்மைக்கு ஓரளவு துணைசெய்கிறது. எனவே, குறைந்தது ஒரு நாளைக்கு ஒரு முறையேனும் தவருமல் குளிக்க வேண்டும். இரண்டு அல்லது மூன்று முறை குளிப்பது சாலச் சிறந்தது. உடல் தூய்மை யாகவும் உறுதியாகவும் உள்ளவனே கர்மானுஷ் டானமும் ஆன்மிகச் சாதனையும் செய்ய வல்லவ னுகிருன்.

ஜபயோக சாதனையில் அடுத்து வற்புறுத்தப் படும் சாதனம் சந்தியாவந்தனம். சந்தியா வந்தனம் காயத்திரி ஜபத்தை முடித்துக் கொண்டே நாமஜபத்தைச் செய்ய வேண்டும். அப்போது மட்டுமே அந்த ஜபம் பூரணப் பலனைத் தந்து சித்திபெறச் செய்யும்.

ஒரு நாளைக்குக் குறைந்தது 108 காயத்திரி செய்ய வேண்டும் என விதிக்கப்பட்டுள்ளது. தவிர்க்க முடியாத காரணங்களால், 108 எண்ணிக்கை செய்ய இயலாதவர்கள் காலை 36, நடுப்பகல் 36, மாலை 36 என வகுத்துக்கொண் டேனும், தவருமல் செய்ய வேண்டும்.



'காயத்ரிக்கு மிஞ்சிய மந்திரம் இல்லை' என்பது ஆன்ருேர் வாக்கு.

## அட்சர லட்சம்

ஜபத்திற்கு அவரவர் தேர்ந்தெடுக்கும் நாமத் தின் எழுத்துக்களுக்கு ஏற்ப, ஜபத்தின் எண்ணிக்கை இதில் கூடும்.

பஞ்சாக்ஷரி என்று சொல்லப்படும் ஐந்தெழுத்து மந்திரத்தை ஜபிக்கும்போது, எழுத்துக்கு ஒரு லட்சம் என்ற கணக்கில் ஐந்து லட்சம் ஜபம் செய்ய வேண்டும்.

எட்டெழுத்து மந்திரமானல் எட்டு லட்சம், பன்னிரண்டெழுத்து மந்திரமானல் பன்னிரண்டு லட்சம் என்று இப்படி நாமத்தில் காணும் எழுத்துக்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப லட்சங்கள் வித்தியாசப்படும்.

இந்த அட்சர லட்சம் ஜபிப்பதை ஒரு 'புரஸ்சரணை' என்று சொல்வர்.

இந்தப் புரஸ்சரணையின் எண்ணிக்கையும், அதன் பலனும் நமது மனப் பரிபாகத்துக்கும் சுத்திக்கும் ஏற்ப, மிகுதிப்படவோ குறையவோ செய்யும்.

ஆனல் சித்தி பெறும்வரையில் உறுதியோடும் நம்பிக்கையோடும் ஜபத்தைத் தொடர்ந்து செய்தல் வேண்டும்.

காலம் எவ்வளவு தாழ்ந்தாலும், இறுதி வெற்றியே நமக்கு முக்கியம். தளராத முயற்சி யும் சலிப்பற்ற உறுதியும் மிக்கவனே சாதனையின் உயர்ந்த பயனை அனுபவிக்க வல்லவனுகிருன்.

## ஜப வகைகள்

"கிரகண காலங்களில் செய்யப்படும் ஜபம் மிகுந்த பலனைத் தருமாதலால், அந்த அரிய காலத்தை ஜபயோகம் பயிலும் சாதகன் தவற விடக் கூடாது" என்று மகான்கள் உபதேசிக் கிருர்கள்.

கோரிக்கைகளோடு செய்யப்படும் ஜப, புரஸ் சரணைகள் புறத் தூய்மை, அகத் தூய்மை இவற்ருேடு வழுவின்றி, விதிகளுக்கு ஒப்பச் செய்யப்பட வேண்டும்.

கோரிக்கையற்ற ஜபம் அல்லது நிஷ்காம ஜபம் எங்கும் எப்போதும் செய்யலாம் என்பது பெரி யோர்களின் வாக்கு.

ஜபம் வைகரி, உபாம்சு, மானசிகம் என்றும், லிகித ஜபம் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

வாயினுல் உரக்கச் சொல்லல், ஜபம் செய்தல் வைகரி எனப்படும். இதற்கு ஜபமாலையின் துணை தேவைப்படுகிறது.

உபாம்சு என்பது உதட்டை மட்டும் அசைத்து நாமஜபம் செய்தல். இதற்கும் ஜபமாலையைப் பயன்படுத்தலாம்.

மானசிகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி மனதிற்குள்ளேயே நாமஜபம் செய்தல்.

லிகித ஜபம் என்பது தனக்கு இஷ்டமான மந்திரத்தை மனத் தூய்மையோடு, ஒருமனப் பட்டுத் தினமும் எழுதுதல். எழுதும்போது மௌனமாக, மனதால் அந்த நாமத்தை எண்ணிக்கொள்ளுதல் மேலும் மிகுந்த பலனை அளிக்கும்.

'வைகரி ஜபத்தைக்காட்டிலும் உபாம்சு ஆயிரம் மடங்கு அதிகப் பலன் கொடுக்கும். மானசிக ஜபம் வைகரியைக்காட்டிலும் ஒரு கோடி மடங்கு அதிகப் பலன் கொடுக்கும்' என்று சாண்டில்ய உபநிஷதம் கூறுகிறது.

காலம் தவருமை, சாத்துவிக உணவுப்பழக்கம், முறையான நெறி, பணிவு, நம்பிக்கை, தளர்வற்ற உறுதி, இலட்சியத்தை அடைந்தே தீருவதென்ற ஆர்வம் இவை சாதகனிடம் காணப்பட வேண்டிய தவிர்க்க முடியாத குணங்கள். இவற்றில் வழு ஏற்படாமல் விழிப்போடு பார்த்துக்கொள்ள வேண்டியது சாதகனின் அரிய பொறுப்பு.

நாமஜபத்திற்கென்று மந்திரத்தை ஒரு முறை தேர்ந்தெடுத்தபிறகு அடிக்கடி அதில் நம்பிக்கை இழந்து, மற்ருென்றுக்கு மாற்றிக்கொள்வது சாதனையில் தளர்ச்சியையும் சலிப்பையும் ஏற் படுத்திச் சாதகனைக் குலைத்துவிடும்.

நாளடைவில் அவன் நாமஜபத்தையே கை நழுவி விட்டுவிட நேரும். பேராபத்துக்கும் பேரி ழப்புக்கும் இலக்காகாமல் சாதகன் தன்னைக் காத்துக்கொள்ளல் நலம்.

ஒரு நாளைக்கு இவ்வளவு எண்ணிக்கை ஜபம் செய்தே தீருவது என்ற உறுதியை மேற்கொண் டாலன்றி ஜபயோக சாதனையில் விரைவில் சித்தி பெற முடியாது. இந்த உறுதியைச் சாதகன் மேற்கொண்டே ஆகவேண்டும். ○

## பிர்லாவின் கொடை

பிரயாகையில் உள்ள ஹிந்தி சாகித்ய சம்மேளனத்திற்கு ஒரு தடவை நிறைய நிதி திரட்ட வேண்டியிருந்தது. அந்த வேலையைச் சம்மேளனத்தின் காரியதரிசியான மௌலிசந்திர சர்மா ஒப்புக்கொண்டிருந்தார்.

நன்கொடை வசூலிக்க ஆரம்பித்த சர்மா, முதலில் யாராவது பெரிய பணக்காரரைப் பார்த்துப் பெரிய தொகையாக வசூலிக்க வேண்டும், அப்பொழுதுதான் மற்றவர்களும் நிறையக் கொடுப்பார்கள் என்று தீர்மானித்தார். ஆகவே அவர் முதலில், கொடைவள்ளல் ஜுகல்கிஷோர் பிர்லா அவர்களைப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்தார்.

அவர் பிர்லா அவர்களைப் பார்த்து, ஹிந்தி சாகித்ய சம்மேளனத்திற்கு ஏன் நிதி தேவைப் படுகிறது என்று விளக்கிச் சொல்லி, அதற்கு ஒரு பெருந்தொகை நன்கொடையாக உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

அதற்குப் பிர்லா, ''சர்மா அவர்களே! நான் இப்பொழுது வியாபாரத்திலிருந்து முழுவதும் விலகிக் கொண்டுவிட்டேன் என்பது தங்களுக்குத் தெரியும். ஆகவே என்னுல் பெருந்தொகை எதுவும் கொடுக்க முடியாது. என் கணக்கில் என்ன பணம் இருக்கிறதோ அதிலிருந்துதான் சிறு தொகை கொடுக்க முடியும்'' என்று சொல்லி, சர்மா கொண்டு வந்திருந்த நோட்டுப் புத்தகத்தில் ரூ 25,000 கொடுப்பதாகக் கையெழுத்திட்டார்.

இதைக் கண்டு சர்மா ஆச்சரியப்பட்டார். '25,000 ரூபாயையா பிர்லா சிறு தொகை என்று குறிப்பிட்டார்!' என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டு, பிர்லா அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்து வீடு திரும்பினுர்.

அடுத்த நாளே, பிர்லாவின் காரியாலயத்திலிருந்து ரூ. 25,000க்கு ஒரு செக் தபாலில் வந்து சேர்ந்ததும் சர்மா ஆச்சரியப்பட்டார். அவர் பிர்லாவைச் சந்தித்து, ''இத்தனை அவசரமாகச் செக் அனுப்ப வேண்டிய அவசியமில்லையே. எனக்குச் சொல்லியனுப்பியிருந்தால் நானே வந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு சென்றிருப்பேனே!'' என்ருர்.

அதற்குப் பிர்லா, ''தங்களுக்கு அவசரம் இல்லாமலிருக்கலாம். ஆனுல் எனக்கு அவசரம். ஏனென்ருல் மனித உடல் அநித்தியம். இன்றைக்கு இருப்பவர் நாளைக்கு இருப்பார் என்று சொல்ல முடியாது. ஆகவே எனக்கு ஏதாவது நேர்ந்தால் தங்களுக்குக் கடன்பட்டவனுக நான் இறப்பேன். அதை நான் செய்ய விரும்பவில்லை. அதனுல்தான் என் காரியாலயத்தில் சொல்லி, உடனே உங்களுக்குச் செக் அனுப்பச் சொன்னேன்'' என்ருர்.

—நாடோடி

# நவராத்திரி விழா

'பவதாரிணி'

நவராத்திரி வழிபாடு என்பது சிறந்த சாக்த வழிபாடாகும். 'நவராத்ர' என்ற வடமொழிச் சொல் நவராத்திரி என மருவியுள்ளது. இந்த விழா புரட்டாசி மாதம் வளர்பிறைப் பிரதமை முதல் நவமி வரை உள்ள ஒன்பது தினங்களில் அனுஷ்டிக்கப் பெறும் நோன்பாகும்.

நவராத்திரி நோன்பு மற்ற விரதங்களைவிட மிகவும் சிறப்பு வாய்ந்தது. மற்றத் தேவதைகளின் சக்திகள் இந்த நவராத்திரிக் காலத்தில் சக்தியிடம் லயமடைந்திருப்பதனாலும், பராசக்தியை மற்றத் தெய்வங்களைவிட ஒன்பது மடங்கு அதிகமாக வழிபட வேண்டும் என்ற கருத்தை உணர்த்தவும் இந்த விழாவிற்கு ஒன்பது தினங்கள் நியமிக்கப் பட்டுள்ளன.

அறியாமையும் மிருகத் தனமும் நிறைந்த அசுரர்களின் கொடுமையிலிருந்து உலகைக் காப்பாற்ற எண்ணம் கொண்ட பார்வதி, சரஸ்வதி, லட்சுமி ஆகிய மூவகைச் சக்திகளும் தமது ரூபங்களை மறைத்து ஓர் உருவமாகித் துர்க்காதேவி என்ற பெயருடன் ஒன்பது நாட்கள் விரதமிருந்து, ஆயுதங்களைப் பூஜைசெய்து பத்தாம் நாள் மஹிஷாசுரனை வதம் செய்து, அசுரசக்திகளை அழித்து, உலகைக் காப்பாற்றிய தாகப் புராண வரலாறு கூறுகிறது.

இவ்வாறு துர்க்காதேவி விரதமிருந்த தினங் களை 'நவராத்திரி' என்றும், அசுரனை வென்ற நாளை 'விஜயதசமி' என்றும், ஒன்பதாவது தினத்தை 'மகா நவமி' என்றும், ஆயுதங்களை வைத்து அன்று பூஜை செய்ததனால் 'ஆயுத பூஜை' என்றும் கொண்டாடுகிறோம்.

இந்த நவராத்திரிக் காலத்தில் சிவன், விஷ்ணு, பிரம்மா போன்ற அனைத்துத் தெய்வங் களும், அவரவர்களுடைய ஆயுதங்களான சூலம், சக்கரம் போன்றவற்றில் காத்து வைத்திருந்த சக்தியை ஆகர்ஷித்தெடுத்துப் பராசக்தியினிடத் தில் கொடுத்ததாக, தேவீ மாஹாத்மியம் கூறுகிறது.

அனைத்துச் சக்திகளையும் தன்னிடம் லயம் செய்துகொள்ளுகிற பராசக்தி, நவராத்திரி ஒன்பது நாட்களிலும் மகேச்வரி, கௌமாரி, வாராகி, மகாலட்சுமி, வைணவி, இந்திராணி, ப்ராஹ்மி, நாரஸிம்ஹி, சாமுண்டி என்று ஒன்பது ரூபமாக ஆவிர்ப்பாவம் ஆகிறாள். ஒவ்வொரு நாளும் இந்த ஒன்பது ரூபங்களில் ஒன்று பிரதானமாகவும், மற்ற எட்டு ரூபங்கள் பரிவாரம் அல்லது அங்கமாகவும் விளங்கு கின்றன.

மதுகைடபர்களை அழித்துப் படைப்பைக் காப்பாற்றத் திருமாலின் யோகநித்திரையி லிருந்து வெளிப்பட்ட தாமஸ மகாசக்தியைத் தான் மகாகாளி அல்லது மகாதுர்க்கை என் கிறோம். இந்த மகாகாளியை இச்சா சக்தி என்பர். நவராத்திரியில் முதல் மூன்று தினமும் மகாதுர்க்கைக்கு உரிய நாட்கள். மஹேச்வரி, கௌமாரி, வாராகி ஆகிய மூவரும் துர்க்கையின் அம்சமானதனால் இவர்களுக்கு முதல் மூன்று தினமும் பிரதான ஆவிர்ப்பாவம் உண்டாகிறது.



மஹிஷாசுரனை வதம் செய்வதற்காகத் தோன்றிய ராஜஸ மகாசக்தியை லட்சுமிதுர்க்கை என்று அழைக்கிறோம். இந்த லட்சுமிதுர்க் கையைக் கிரியா சக்தி என்பர். இவளது அம்ச

மர்க மகாலட்சுமி, வைணவி, இந்திராணி ஆகிய மூவரும் விளங்குகின்றனர். இவர்களுக்கு இரண்டாவது மூன்று தினமும் பிரதான ஆவிர்ப் பாவம் ஏற்படுகிறது.

சும்ப நிசும்பர்களை அழிப்பதற்குத் தோன்றிய மகாசக்தியை மகாசரஸ்வதி என்று கூறுகிறோம். இந்தச் சக்தியை ஞானசக்தி என்பர். ப்ராஹ்மி, நாரஸிம்ஹி, சாமுண்டி என்ற மூவரும் மகா சரஸ்வதியின் அம்சமாவர். இவர்களுக்குக் கடைசி மூன்று நாட்களிலும் பிரதான ஆவிர்ப் பாவம் உண்டாகிறது.



நவராத்திரி தினங்களில் ஒவ்வொரு தினமும் ஒவ்வொரு சக்தி பிரதானமாக அமைந்து, மற்ற அம்சங்கள் பரிவாரங்களாக விளங்கும் முறை—

| | |
|---|---|
| முதல்நாள் பிரதான அம்சம் | — மஹேச்வரி. |
| இரண்டாம் நாள் | — கௌமாரி. |
| மூன்றாவது நாள் | — வாராகி. |
| நான்காவது நாள் | — மகாலட்சுமி. |
| ஐந்தாவது நாள் | — வைஷ்ணவி. |
| ஆறாம் நாள் | — இந்திராணி. |
| ஏழாம் நாள் | — ப்ராஹ்மி. |
| எட்டாம் நாள் | — நாரஸிம்ஹி. |
| ஒன்பதாம் நாள் | — சாமுண்டி. |

> அழகு, பண்பு, தயை ஆகியவற்றின் தனித் தனி உருவகமாகவே இறைவனைக் கண்டு இன்புறு.
>
> —விசிஷ்டாத்வைதம்

இப்படி நவராத்திரி நாட்களில் ஒவ்வொரு நாளும் ஓர் அம்சம் பிரதானமாகவும் மற்ற அம்சங்கள் பரிவாரங்களாகவும் அமைகின்றன.

துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி ஆகிய மூவகைச் சக்திகளுக்கும் ஆதாரமாக இருப்பவள் ஆதிமூல சக்தியாகிய சண்டிகாதேவியாவாள் என்று தேவீ மாஹாத்மியம் கூறுகிறது.

இந்த ஒன்பது சக்திகளையும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாக அலங்காரம் செய்து வழி படுவர். மதுகைடபர் வதத்திற்குக் காரணமாக இருந்து உதவிய தேவியை அபயம், வரதம், புஸ்தகம், அட்சமாலை ஆகியவற்றுடன் கூடிய குமாரி வடிவமாக அலங்கரித்து வழிபடுகிறோம்.

இரண்டாம் நாள், மகிஷாசுரனின் சேனைகளை வதம் செய்யப் புறப்பட்ட ராஜராஜேச்வரியாகக் கரும்பு, வில், மலரம்பு, பாசாங்குசம் ஆகிய வற்றை ஏந்திய கோலத்தில் அலங்கரித்து வழிபடுகிறோம்.

மூன்றாவது நாளில், சூலமும் கையுமாக மகிஷத் தின் தலைமீது வீற்றிருக்கும் கோலமாய் அலங் கரித்து வழிபடுகிறோம். இந்தத் துர்க்கையைக் கல்யாணி என்று சொல்வதுண்டு.

நான்காம் நாள், துர்க்கையை ஜயதுர்க்கை என்பர். வெற்றித் திருக்கோலத்தோடு சிங்கா தனத்தின் மீது அமர்ந்து, தேவர்களின் துதியை ஏற்கும் கோலத்தில் காட்சி தருகிறாள். இந்த அலங்கார துர்க்கையை, ரோகிணி துர்க்கை என்பர்.

ஐந்தாம் நாளில், சுகாசனத்தில் அமர்ந்த கோலத்துடன், சும்பனின் தூதுவனான சுக்கிரீவன் என்ற அசுரன் தூது சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கும் கோலத்தில் அலங்கரித்து வழி படுகிறோம். இந்தத் துர்க்கையைக் காளி என்பர்.

ஆறாம் நாள், தூம்ரலோசன வதத்திற்கு உரிய தோற்றம். சண்டிகாதேவியாக, சர்ப்பாசனத்தில் அமர்ந்து, திருக்கரங்களில் அட்ச மாலையும் கபாலமும் தாமரைப் பூவும் பொற்கலசமும் ஏந்தி, பிறை அணிந்த கோலத்தில் அம்பிகை காட்சி தருகிறாள்.

ஏழாம் நாளில், சண்ட முண்டர்களை வதம் செய்த பின்பு பொற்பீடத்தில் அமர்ந்து, ஒரு காலைக் கீழே தாமரைப் பூவில் ஊன்றியபடி வீணை வாசித்துக்கொண்டிருக்கும் கோலத்தில் காட்சி தருகிறாள். இந்தத் துர்க்கையை, சாம்பவி என்பர்.

எட்டாம் நாள், இரத்தபீஜன் வதத்திற்குப் பின்பு கருணை நிறைந்த தேவியாகக் கரும்பு வில்லுடன் காட்சி தருகிறாள். இவளைச் சுற்றி அணிமா முதலிய அஷ்ட சக்திகள் வீற்றிருக்கிறார்கள். இவளைத் துர்க்கா என்று கூறுவர்.

ஒன்பதாம் நாள், கைகளில் வில், பாணம், அங்குசம், சூலம் ஆகியவற்றை ஏந்திய கோலத்துடன், சும்ப நிசும்ப வதத் தோற்றத்தோடு ஸுபத்ராதேவியாகக் காட்சி அளிக்கிறாள்.



இவ்வாறு ஒன்பது இரவுகள் சக்தியாக விளங்கிய தேவி பத்தாம் நாள் சிவத்துள் சேர்ந்து கலந்து அர்த்தநாரியான சிவ-சக்தி வடிவத்தில் வருகிறாள்.

### விஜயதசமி

பத்தாவது நாளான விஜயதசமி என்பது மகாசக்தியின் வெற்றி பெற்ற திருநாளாகும். இதுவரை ஒன்பது நாட்களும் தேவியைச் சூட்சும ரூபமாகவும் ஆத்மசைதன்யமாகவும் வழிபட்டுப் பின்பு பத்தாம் நாள் தேவியின் ஸ்தூல ரூபத்தை வழிபடுவது வழக்கம்.

பாண்டவர்கள் தங்களது அஞ்ஞாத வாசத்தை முடித்து வந்த பிறகு, அது வரையில் தங்களது ஆயுதங்களை வன்னிமரத்தில் ஒளித்து வைத்திருந்து, பின்பு எடுத்துப் பூஜை செய்தனர் என்று வரலாறு உள்ளது. துர்க்கையின் வடிவம் வன்னி மரம் என்றும், பாவத்தையும் சத்துருக்களையும் அழிக்கக்கூடியது என்றும் கூறுவர்.

### கன்னிகா பூஜை

கன்னிகா பூஜை என்பது நவராத்திரி பூஜையின் ஒரு பகுதியாகும். இரண்டு வயது முதல் பத்து வயதுக்கு உட்பட்ட கன்னிகைகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குப் பூஜை செய்து, பட்டாடை, ஆபரணங்கள், மஞ்சள் குங்குமம் புஷ்பம் வழங்கி அவரவர் சக்திக்கு ஏற்றவாறு வழிபடுவது வழக்கம். இந்தக் கன்னிகைகளைக் குமாரி, திரிமூர்த்தி, கல்யாணி, ரோகிணி, காளிகா, சண்டிகா, சாம்பவி, துர்க்கை, சுபத்திரை என்ற பெயர்களில் வழிபடுவர்.

பகலில் செய்யும் பூஜை ஈசுவரனுக்கு உரியதாகவும், இரவில் செய்யும் பூஜை பராசக்திக்கு உரியதாகவும் பொதுவாகக் கூறுவர். ஆனால் இந்த நவராத்திரி நாட்களில் பகலிலும் இரவிலும் செய்யும் பூஜைகள் பராசக்திக்கே உரியனவாகும்.

இந்த நவராத்திரி நாட்களில் பொம்மைக் கொலு வைப்பது தொன்றுதொட்டு வழக்கத்தில் இருந்து வரும் நிகழ்ச்சியாகும். பொம்மைக் கொலுவில் ஒன்பது படிகள் அமைத்து, அவற்றில் நிறையப் பொம்மைகளை அடுக்கிப் பூஜிப்பர். கீழ்ப்படிகளில் உலகாயத வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை வைத்திருப்பர். இது தாமஸ குணத்திற்கு விளக்கமாக அமைந்திருக்கும். நடுப் பகுதியில் இருக்கும் பொம்மைகள் ராஜா ராணி படைவீரர்கள் போன்றவை காணப்படும். இது ராஜஸ ஆற்றலைக் குறிக்கும். மேற்பகுதியில், தெய்வத் திருவுருவங்களும் கலசமும் காணப்படும். இது சத்துவ குணத்தைக் குறிப்பதாகும். மேலே உள்ள கலசமே சக்தியின் திருவருளாகும். இந்த முக்குணத்தைக் கடந்த போதுதான் சக்தியின் அமுதகலசம் கிடைக்கும் என்பதைக் காட்டுவதே பொம்மைக் கொலுவின் தத்துவமாகிறது.

### ஆன்ம சாதகனுக்கு நவராத்திரி பூஜை

யோகநெறியில் செல்லும் ஆன்ம சாதகனுக்கு இந்த நவராத்திரி பூஜை உயர்ந்த தத்துவங்களை

உணர்த்துகிறது. சாதகனுடைய நடைமுறை வாழ்க்கையிலும், அவனது அன்றாட நடவடிக்கை களிலும் அன்னை துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி என்ற தன் அம்சங்களில் வெளிப்பட்டு, அவனுக்கு உறுதுணை புரிகிருள். முதலில் துர்க்கை, இரண் டாவது லட்சுமி, மூன்ருவது சரஸ்வதி என்று குறிப்பிட்ட வரிசைக் கிரம முறையில் வழிபடு வதற்கு மிகவும் ஆழ்ந்த தத்துவம் இருக்கிறது.

சாதகன் தன் மனதில் இருக்கிற அஞ்ஞானம், அசுர சக்திகள், வாசனைகள் போன்ற கீழான தீய சக்திகளை அழிப்பதே முதற் கடமையாகிறது. அதற்குத் துர்க்கையைத் தன் மனதில் ஆவாகனம் செய்து, அதன் மூலம் தன்னிடமுள்ள மிருகத் தன்மைகளை அழிக்கும்படி சாதகன் வேண்டு கிருன். அன்னை கருணை கூர்ந்து தனது அம்சமான துர்க்கையின் வடிவில் வந்து அவனது புலன்களை வென்று மனதை அடக்கித் தீய சக்திகளிட மிருந்து மீண்டுவர உதவி புரிகிருள். இதுவே காளிக்கு மிருகபலி இடுதல் என்பதன் கருத்தா கிறது. ஆனல், காலப்போக்கில் தத்துவங்களைத் தவருகப் புரிந்துகொண்டு மிருகபலி என்பது வெறும் புறச் சடங்காக மாறிவிட்டது. இது வரை இச்சா சக்தியாகத் தாமஸ வடிவில் இருந்து செயற்பட்ட அன்னை, அடுத்துக் கிரியா சக்தியாக ராஜஸத் தோற்றத்தில் இருந்து உதவி புரிகிருள்.

அன்னை லட்சுமி என்ற அம்சத்தில் ரஜோ குணத்துடன் விளங்குகிருள். ரஜோகுணத்தினுல் தான் காரியங்களைச் செய்ய முடிகிறது. மேலும், அவள் சாதகனிடத்தில் உள்ளத்தூய்மை, யோகத் தில் உறுதி, புலனடக்கம், தியாகம், விரதம், அஹிம்ஸை, சாந்தம் போன்ற பண்புகளாக வெளிப்படுகிருள். ஆன்ம சாதகனின் உள்ளத்தில் தெய்வ சம்பத்துக்களின் மூலமாகக் குடிகொள் கிருள். அதாவது மனிதத்தன்மையை அழித்துத் தெய்வ சம்பத்தை அருளுகிருள். இதுவே நரபலி என்று ஆகிறது.

மூன்ருவது, சாதகனுடைய உள்ளத்தில் சத்துவ குணத்தின் அம்சமான சரஸ்வதியாக வெளிப்படுகிருள். சரஸ்வதி குடிபுகுந்த பின்பு சாதகனிடம் மந்தகுணம் என்பது அறவே நீங்கி விடுகிறது. சாதகனது ரஜோகுணம் தாமஸ குணத்தோடு சேராமல் சத்துவ குணத்தோடு சேர்ந்து ஆன்மிக வாழ்வில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்துகிறது. அப்போது அவ னது வெளிப்பாடு யோகமாகவும், சாதனையாக வும், தாரணை தியானமாகவும், ஞானப் பிரகாச மாகவும் தோன்றுகிறது. அன்னை சரஸ்வதி வேதங்களின் வடிவமாகவும், அக்ஷரங்களின் வடிவமாகவும் இருந்து, சாதகன் அத்தியயனம் செய்யும்பொழுது அக்ஷரம், வார்த்தை ஆகிய அவளது வடிவத்தின் மூலம் பரஞானத்தைத் தருகிருள்.



அன்னை சரஸ்வதி வாக்கு ரூபத்திலும் விளங்கு கிருள். சாதகன் மௌனத்தை அனுஷ்டிப்பது அன்னை சரஸ்வதியை வழிபடுவதாகும். வாக்கு ரூபத்திலுள்ள அன்னையின் சக்தி மௌனத்தினுல் சேமிக்கும்பொழுது அது மனதை உள்முகமாக்க வும், தான் யார் என்ற விசாரணைக்கும் பயன் படுகிறது. இவ்வாறு சாதகனிடம் காணப்படும் ஆன்மிகப் பண்புகள் அனைத்தும் சரஸ்வதியின் அம்சமே ஆகின்றன.

துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி என்ற அம்சங் களில் சாதகனுக்கு உதவிபுரிந்த அன்னை விஜய தசமி மூலம் வெற்றியைத் தருகிருள். வித்யா மாயையின் வியக்தி வடிவத் தோற்றமே குரு ஆவார். அத்தகைய குருமூலம் சாதகனைப் பரப்பிரம்மத்திடமே அழைத்துச் சென்று ஆன்ம அனுபூதியைத் தருகிருள்.

எனவே நவராத்திரி என்பது, லௌகிக வாழ்க்கையிலிருந்து படிப்படியாக ஆன்மிக வாழ்க்கைக்கு அழைத்துச் செல்லும் ஏற்ற தொரு வழிபாடாகத் திகழ்கிறது. ○

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

ஜூலை 9

சுவாமி துரியானந்தர் ஒரு பையனுடன் பேசிக் கொண்டிருந்தபோது அவனைக் கேட்டார்—

நீ தியானம் பயில்கிறாய், அல்லவா? தியானம் என்பது தெய்விக உருவங்களைக் குறித்ததாக இருக்கலாம், ஓம் என்பதைக் குறித்ததாகவும் இருக்கலாம். ஒருவர் தியானத்தில் மேற்செல்லச் செல்ல, மனம் ஓம் என்பதிலேயே ஒடுங்கிவிடும்.

தஜ்-ஜபஸ்-ததர்த்த-பாவநம். 'ஓம்' என்பதையே உருவேற்றிக்கொண்டு அதன் பொருளைச் சிந்தித்தபடி இருப்பதில் முன்னேறும் போது மனம் ஒரே நிலையில் நிற்கிறது. அதாவது அது (மனம்) அதை (தியானிக்கப்படும் பொருளை) விட்டுவிடுவதில்லை.

'மன ஒருமைப்பாட்டுக்கு ஏற்படும் தடைகளெல்லாம் இறைவனிடம் சரணாகதி புரிவதனால் அழிபடுகின்றன. ஒருவன் தன் ஆத்மாவை அனுபவத்தில் அறிகிறான்.'

மேலும் பதஞ்ஜலி, யோகத்துக்கு ஏற்படும் தடைகளைப்பற்றிக் கூறுகிறார். ஆன்மிக ஈடுபாட்டைச் சிதற அடிக்கும் இந்தச் சக்திகள் யாவை? அவை வருமாறு—ஒருவன் நோயுறலாம். ஒன்று, அவனுக்குப் பைத்தியம் பிடிக்கலாம், அல்லது மேலும் முன்னேற இயலாத வகையில் ஏதாவது கொடிய நோய் உண்டாகலாம். மனம் செயலற்றுப் போவதனாலோ, மரத்துப் போவதனாலோ மயக்கம் போன்ற தளர்ச்சி ஏற்படலாம். ஒரு விஷயம் இப்படியா அப்படியா என்று, ஒரு குறிப்பிட்ட காரியம் விரும்பிய பலன் தருமா தராதா என்று உளைவதான ஐயப்பாடு உண்டாகலாம். சமாதிக்கு இட்டுச் செல்வதற்கானவற்றைச் செய்யாத கவனக் குறைவு ஏற்படலாம். தமோகுணம் அல்லது மந்தத் தன்மையின் மிகுதியால் உண்டாவதான சோம்பல் ஏற்படலாம். புலன்நுகர்ச்சிப் பொருள்களிடம் ஏற்படும் கவர்ச்சியால் பற்றுதல் உண்டாகலாம். ஒன்றை வேறாகத் தவறாகக் கருதும் பிரமை ஏற்படலாம். சமாதியின் உயர் நிலையை அடையாமலே நின்றுவிடலாம்.*

இன்னமும் ஒரு தடை உள்ளது. அது, ஏற்கனவே சமாதியில் அடைந்த ஒருவித நிலையில் நிலைத்திருக்க இயலாமையாகும். இவை மனதைக் கலக்கி யோகம் கூடாமல் தடுக்கின்றன. ஓம் என்பதை ஒருவன் தியானிப்பதனால் இந்தத் தடைகள் யாவும் நீக்கப்படுகின்றன. ஆனால் முதலுக்கே ஒருவனுக்குத் தியானம் செய்யும் விழைவு இல்லாமலும் போகலாம்!

ஒருவன் பித்தத்தினால் பாதிக்கப்பட்டிருக்கும் போது கற்கண்டுகூடக் கசக்கிறது. ஆனால் அதற்கு மருந்து கற்கண்டுதான். விடாமல் தொடர்ந்து அவன் அதைச் சேர்த்துக்கொண்டு வந்தால் வியாதி மறையும்; கற்கண்டின் இனிப்பும் தெரியத் தொடங்கிவிடும். பகவந் நாமம் இது போலத்தான். அஞ்ஞானத்துக்கு ஆட்பட்டுள்ள ஒரு மானுடன் அதை மருந்து அருந்துவது போலவே நாள்தோறும் உருவேற்றி வந்தால், நாளடைவில் அது இனிப்பாகிவிடும். சங்கடமும் (அஞ்ஞானமும்) தீரும். அவன் பகவந் நாம இனிமையைச் சுவைக்கத் திறமும் பெறுவான்; அது அஞ்ஞான நோயின் அடி வேர்களையே அறுத்துவிடும்.

எனவே விருப்பம் இல்லாவிட்டாலும்கூட ஒருவன் அதன் ஜபத்தைப் பயில வேண்டும்.

---

*இந்த ஒன்பது தடைகளும் பதஞ்ஜலி யோக சூத்திரத்தில் முறையே வ்யாதி, ஸ்த்யாநம், ஸம்சயம், ப்ரமாதம், ஆலஸ்யம், அவிரதி, ப்ராந்தி தர்சநம், ஆலப்த பூமிகத்வம், அநவஸ்தி தத்வம் எனப்படும்.

அதை விட்டுவிடுபவன் அதோகதியே அடைந்து விடுவான். 'ஓ அர்ஜுன! பழக்கத்தாலும் வைராக்கியத்தாலும் மனம் கட்டுப்படுத்தப் பெறுகிறது' என்று கீதை கூறுகிறது. 'பொறுமையாக விவேகத்தைக் கடைப்பிடித்து ஒருவன் மெல்ல மெல்ல மனதைப் புலன்நுகர்ச்சிப் பொருள்களிலிருந்து உள்ளே வாங்கிக்கொள்ள வேண்டும். ஆத்மாவிடமே மனதை நிலைப்படுத்தி வேறு எதையும் சிந்திக்காதிருக்க வேண்டும்' என்றும் அது கூறுகிறது.

'நீண்டகாலம் இடைமுறியாமலும் ஜாக்கிரதை யுடனும் அப்பியாஸத்தை விடாமல் பின்பற்றி வந்தால் ஒருமைப்பாடு ஸ்திரப்படும்' என்று யோகசூத்திர ஆசிரியர் சொல்கிறார்.

ஸ்திரமான சித்த ஒருமைக்கு நாம் உயர வேண்டும். இளஞ்செடிக்குச் சுற்றிலும் வேலி தேவைப்படுகிறது. மரமாகிப் பெரிதாகும்போது அதற்கு இப்படிப்பட்ட வேலி வேண்டியதில்லை. நம்முடைய லட்சியத்தில் நமக்குப் பற்றும் உறுதியும் இருக்க வேண்டும்.

குறிப்பிட்ட ஒரு வழிமுறை சரியானது என நாம் முடிவு செய்தவுடனே, அதற்கே நம் வாழ்வை அர்ப்பித்துவிட உறுதி பூண வேண்டும். நம் குணப்பாங்கில், முடிவு செய்யும், நிச்சய புத்தி இருக்க வேண்டும். 'ஓ அர்ஜுன! இதில் நிச்சயமாய் முடிவெடுக்கும் புத்தி ஒன்றே; நிச்சயத்துக்கு வராத நிலையற்ற புத்தியுள்ள வர்கள் எண்ணிலாத வேறுபாடுடைய கருத்துக் களைக் கொண்டிருப்பார்கள்.' குறிப்பிட்ட ஒரு கிரமத்தை நாம் முடிவாக நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டும். நம் வாழ்க்கை முழுவதை யும் அதற்கே ஈடுபடுத்த வேண்டும்.

'ப்ரஹ்மசர்யாத் வீர்யலாப: — புலனடக்கத் திலிருந்தே வீரியம் உண்டாகிறது.' நம்மைத் தக்க பாத்திரமாக்கிக் கொள்ள வேண்டும். எந்த ஒரு பணியையும் மேற்கொள்ளுமுன் அதற்குத் தக்கவனாக உன்னைச் செய்துகொள்.

ராமமூர்த்தி (பயில்வான்) ஓடும் மோட்டார் காரை நிறுத்துகிறார் என்பதனால், நானும் அவ்வாறு செய்ய முயல்வது சரியாகுமா? அது முட்டாள்தனமேயாகும். ஆயினும் இது அடி யோடு இயலாத அருஞ்சாதனை அல்ல. அவர்

> பணம் சேரச் சேர மனமும் மாறிக்கொண்டே போகும். பணத்தாசை பிடித்தவர்களுக்கு உற வினர் இருக்க மாட்டார்கள். பெரியோரிடமும் அவர்களுக்கு மதிப்பு இராது.
> —சம்ஸ்கிருதப் பழமொழி

இதை எப்படிச் செய்கிறார் என்று ஒருவன் கவனித்துச் சிறுகச் சிறுகத் தகுதி பெற்றால், கோபார் இப்போது செய்வது போல், தானும் அவ்வாறே செய்யலாம்.

பெரும்பாலான மக்களுக்குத் தங்கள் சக்தியே தெரியவில்லை. ஹனுமாரின் சக்தியை ஜாம்பவான் உசுப்பிவிட வேண்டியிருந்தது. ராமனின் பொருட்டுக் கடல்கடந்து சென்று வேலைமுடித்துத் திரும்ப வானரர்களுள் யாருக்கு ஆற்றல் இருக் கிறது என்று அங்கதன் கேட்டான். அப்போது ஜாம்பவான், ''செல்வது திரும்புவது ஆகிய இரண்டையும் செய்ய இதோ ஒருவன் இருக் கிறான்'' என்றார். பிறகு ஹனுமாரின் பராக்கிரமச் செயல்களைக் கூறலானார் — பிறந்தவுடனேயே அவர் சூரியனைப் பிடிப்பதற்காகக் குதித்தெழுந் ததைக் கூறினார். இது ஹனுமாரின் தன்னம் பிக்கையை எழுப்பிவிடும் பலனை உண்டாக்கிற்று.

ஹனுமார் தமது வானமார்க்கப் பயணத்தைத் தொடங்கிவிட்டார். வழியில் ஸுரமை பாம்பு வடிவம் எடுத்துக்கொண்டு வந்து அவரை எதிர்த்தாள். ''நீ போகுமுன் என் வாயின் வழியாகச் செல்'' என்றாள். ஹனுமான் முதலில் அவளை வணங்கி, ''நான் இப்போது ராம காரியமாகச் சென்று கொண்டிருக்கிறேன். முதலில் இதை நான் முடிக்க விடுவாய். திரும்பி வரும்போது உன் வாய்வழியே செல்கிறேன்'' என்றார். அவருடைய மரியாதைப் பண்பைப் பாருங்கள். அதம பட்ச எதிர்ப்பு முறையைக் காட்டினார். ''இல்லை, நீ இப்போதே இதைச் செய்ய வேண்டும்'' என்றாள் ஸுரமை. ஹனுமாருக்கு இக்கட்டு ஏற்பட்டது. தமது வடிவத்தைப் பெரிதாக்கினார். ஸுரமையும் அதே போலச் செய்தாள். இருவரும் போட்டி போட்டுக் கொண்டு தங்களது உருவத்தைப் பெரிதாக்கிக் கொண்டு போனார்கள். இது பயன் தராது எனக் கண்டுகொண்ட ஹனுமார் சடக்கென்று தம் உருவத்தை மிகச் சிறியதாகக் குறுக்கிக்

கொண்டு ஊடே சென்றுவிட்டார். ஸுரமையின் வாய்வழியே புகுந்து வெளிவந்துவிட்டார்.

எஜமானனின் விருப்பத்தை முன்கூட்டியே ஊகித்து அதன்படிச் செய்பவன் பணியாட்களில் உத்தமமானவன்; எஜமானன் உத்தரவு செய்த பின் செயற்படுபவன் மத்திமன்; உத்தரவு பெற்ற பின்பும் அதை நிறைவேற்றத் தவறுபவன் அதமன்.

சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கத் தூதர்கள் அனுப்பப்பட்டார்கள். எல்லோரும் புறப்பட்டனர். ஆனால் ஹனுமார் மட்டுமே புறப்படுமுன், தாம் ராமதூதர் என்பதற்கான ஆதாரபூர்வ அடையாளங்களை வேண்டினார். இதிலிருந்து ராமர் இவரே வெற்றி காண்பார் என்று புரிந்து கொண்டார். அவர் விரும்பிய ஸந்தேசத்தை (தூதுமொழியை) அவருக்கு ரகசியமாகக் கூறினார்.

இலங்கையை அடைந்த ஹனுமார் ராவணனைச் சிறுமைக்கு ஆளாக்கி, தமது வீரதீரத்துக்கு மகத்தான சான்று காட்டினார்.

நமக்குள் சகல சக்திகளும் இருக்கின்றன என்று யோகநூல்கள் சொல்கின்றன. யுக்தமான ஒழுங்குகளால் நாம் மனதைக் கட்டுப்படுத்த வேண்டும். அப்போதுதான் அதன் சக்திகள் வெளிப்படுத்தப்படும். ஆன்மசக்தியைத் திரட்டிக் கொள்ளப் பரிபூரணப் பிரம்மசரியம் தேவை.

சீடனாக இருப்பது மிகவும் சிரமம். நீ கதை கேட்டதில்லை? ஒருவன் சீடனாக இருக்க விரும்பினான். ஒரு குருவிடம் போய், ''ஐயா, என்னை ஒரு சீடனாக ஆக்குங்கள்'' என்றான். ''அப்படி இருக்க உன்னால் முடியுமா? சீடன் என்றால் தண்ணீர் இழுக்க வேண்டும், விறகு கொண்டுவர வேண்டும், ஆசிரியருக்குத் தொண்டு செய்ய வேண்டும். இதெல்லாம் செய்ய உன்னால் ஆகுமா?'' என்று குரு பதிலுக்குக் கேட்டாராம்.

அதற்கு அந்த மனிதன், ''அது சரி, குருவாக இருப்பவர் என்ன செய்ய வேண்டும?'' என்றானாம். ''அதிகம் சொல்ல ஒன்றும் இல்லை. அவர் சௌக்கியமாய் உட்கார்ந்துகொண்டு, அவ்வப்போது கொஞ்சம் உபதேசம் செய்வார். அவ்வளவே'' என்று ஆசிரியர் பதில் அளித்தாராம். உடனே அந்த மனிதன், ''சீடனாக இருப்பது எனக்குச் சிரமமாக இருக்குமென்று நீங்கள் நினைத்தால், அதற்குப் பதில் என்னை ஏன் நீங்கள் ஒரு குருவாக ஆக்கிவிடக் கூடாது?'' என்று கேட்டானாம். எத்தனை வேடிக்கை!

> 'குழந்தையாக இரு' என்று உபநிஷதம் சொல்கிறது. ஏனெனில் அது கபடம் இல்லாதது. எனவே அது கடவுளுக்கு ஒப்பாகும்.
>
> —காஞ்சிப் பெரியவர்

விதை விதைக்காமலே விளைச்சலை அறுவடை செய்ய எல்லாரும் ஆசைப்படுகிறார்கள். தன்னைத் தக்க பாத்திரமாக்கிக் கொள்பவன் சிறுகச் சிறுகத் தனது குறைபாடுகளை வென்றுவிடுகிறான். எடுத்த எடுப்பிலேயே இதைச் செய்துவிட நீ முயன்றால் வெற்றிகாண மாட்டாய். ஏனெனில் அவை (குறைபாடுகள்) நீங்காமல் தம் போக்கைக் காட்டி வரும். ஆகையால் ஒருவன் நிதானமாகவே மனதை உள்ளுக்கு இழுத்துக்கொள்ள வேண்டும்.

'அங்கே (பரம்பொருளின் சந்நிதியில்) சூரியன் பிரகாசிப்பதில்லை, சந்திரனும் பிரகாசிப்பதில்லை, நட்சத்திரங்களும் இல்லை, மின்னலுங்கூட இல்லை. (இவ்வாறிருக்க) அக்கினி மட்டும் அங்கு ஏது? அது (பரம்பொருள்) ஸ்வயம் பிரகாசமாக இருப்பதனாலேயே இவை எல்லாம் பிரகாசிக்கின்றன. அதன் ஒளியாலேயே ஈதனைத்தும் ஒளிர்கின்றன.'

நாம் அகப் பொருளையும் புறப் பொருளையும் ஒன்றாகக் குழப்பிக் கொண்டிருக்கிறோம். இவற்றைப் பிரிக்க முடியும். நான் அகப் பொருளே, புறப் பொருளல்ல. புத்தி உட்படச் சகலப் பிரபஞ்சமும் புறப் பொருள் வரிசையின் கீழ் வருபவையே. 'மூலே மூலாபாவாத் அமூலம் மூலம்— முதற் காரணத்துக்கு மேற்கொண்டு மூல காரணம் இல்லாததனால் அது (புறப்பொருளால்) விளக்கப்பட்டதல்ல.' இப்படிப்பட்ட உண்மைகளை முதலில் கண்டுபிடித்தவர்கள் எத்தனை சிந்தித்திருக்க வேண்டும்?

குணுகுணங்களைச் சீர்தூக்கிப் பார்க்கும் விவேகம் முற்றுருப் பெற்றதாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பயன் தராது. குழந்தைகள்கூட அடிக்கடி 'சுவர்க்க சாட்சியாக!' ('சாமி சத்தியமாக!') என்கின்றன. வேடிக்கையான கருத்துத்தான்! எவரோ சொல்வதைக் கேட்டுக் குழந்தைகளும் இந்தச் சொற்ருெடரை எடுத்துக்கொண்டிருக்கின்றன. இந்தக் கருத்தை அவை அறிவாராய்ச்சி செய்வதில்லை; ஆகையால் சகஜமாகச் சொல்லி விடுகின்றன.

ஒரு பறவை தனது இரண்டு இறக்கைகளைக் கொண்டு ஆகாயத்தில் பறப்பது போல, நாம் விவேகம், துறவு என்ற இரண்டு இறக்கைகளைக் கொண்டு மோக்ஷமாளிகைக்கு உயர்ந்து செல்ல வேண்டும்.

ஒருவனுக்கு மெய்யான விவேகமும் துறவுப் பாங்கும் இருந்துவிட்டால் அவனைப்பற்றிக் கவலை இல்லை. கானல்தோற்றத்தை ஒருவன் உண்மையான நீர் என்று தவருக எண்ணுமளவு தான் கானல்நீரை நோக்கி ஓடுவான். இந்தப் பிரமை ஒரு முறை தகர்க்கப்பட்டால் போதும், எவனும் நீருக்காகக் கானல்தோற்றத்தின் பின் ஓடமாட்டான். இதைப் பற்றிய உண்மை என்னவென்ருல், எவனைத் திவ்ய மாதா கைப் பிடிப்பில் வைத்திருக்கிருளோ, அவன் மாத்திரமே தப்பித்துக்கொள்கிருன்.

'மசி நன்ருக இருந்தாலே கைநாட்டு தெளிவாக இருக்கும். அது கெட்டிருந்தால் கைநாட்டுப் பதிவும் கெட்டுப்போயிருக்கும்' என்று ஸ்ரீராம கிருஷ்ணர் கூறுவது வழக்கம். விவேகமும் துறவும் கொண்ட மனதிலேயே ஆன்மிக உபதேசங்கள் நிலையாகப் பதிவு பெறும். இவற்றில் குறைபாடு இருந்தால் போதனை பதிவதும் அதற்கேற்பக் குறைவுற்றதாக இருக்கும். ○

# செய்திகள்

* ஸ்ரீராமகிருஷ்ண மடம், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் உபதலைவர் ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ் அவர்கள் செம்டம்பர் 7-ஆம் நாள் சென்னைக்கு வருகிருர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள் கிருேம். அவர் சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் செப்டம்பர் 8, 9 தேதிகளில் தங்கி யிருந்துவிட்டு, செப்டம்பர் 10-ஆம் நாள் கல்கத்தா திரும்ப இருக்கிருர்.

* ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கத்தின் ஆதரவில் ஆகஸ்ட் 7-ஆம் நாள் சனிக்கிழமை, அடையாறு ஸ்ரீஅனந்தபத்மநாப ஸ்வாமி கோவிலில் 'ஸ்ரீராமகிருஷ்ணர் தினம்' சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

மாலை 6 மணிக்குத் துவங்கிய பொதுக் கூட்டத்திற்கு சுவாமி தபஸ்யானந்தர் தலைமை வகித்துத் தலைமையுரை வழங்கினர். டாக்டர் ஔவை நடராஜன் சிறப்புரையாற்றினர்.

கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்ற 554 மாணவ மாணவிகளுக்கு விழாவில் சுழல் கேடயமும் பரிசுகளும் வழங்கப்பெற்றன.

* மேற்கு வங்காளத்தில் பஞ்சம் காரணமாகப் பாதிக்கப்பட்ட மால்டா மாவட்டத்தைச் சேர்ந்த 323 கிராமங்களில் மிஷன் நிவாரணப் பணிகளைத் துவக்கியுள்ளது. 71,750 கிலோ அரிசியும் மற்றும் உணவுப் பொருள்களும் விநியோகிக்கப் பட்டன. இதுவரை 18,435 குடும்பங்களைச் சேர்ந்த 71,254 மக்கள் இந்த நிவாரணக் கேந்திரத்தின் மூலம் பயனடைந்தனர். இவர் களுள் 27,025 பேர் 16 வயதிற்கு உட்பட்டவர் ஆவர்.




# மீன்களை எப்படிக் காப்பது?

நாடோடி

சங்கராசாரியார் ஸ்ரீ கிருஷ்ண போதாச்ரம் அவர்கள் ஒரு சமயம் குருக்ஷேத்திரத்தை அடைந்து, அங்குள்ள கோவில்களையும் தீர்த்தங்களையும் தரிசனம் செய்வதற்காக இரண்டு சிஷ்யர்களை உடன் அழைத்துக்கொண்டு கால் நடையாக நடந்து சென்றுகொண்டிருந்தார்.

அப்பொழுது அந்தப் பக்கங்களில் மழையே இல்லையாதலால் எங்கே பார்த்தாலும் தரை காய்ந்து கிடந்தது. நீர்நிலைகள் வற்றிக் கிடந்தன. இவற்றைப் பார்த்துக்கொண்டே சென்ற சங்கராசாரியார் ஒரு கோவிலை அடைந்தார். அந்தக் கோவிலுக்குப் பக்கத்தில் இருந்த குளத்தில் பல மீன்கள் தண்ணீர் இல்லாத தனல் மாண்டுவிட்டதைக் கண்டார். எஞ்சியுள்ள மீன்கள் குளத்தில் ஒரு சிறு பள்ளத்தில் தேங்கியிருந்த தண்ணீரில் தவித்துக்கொண்டிருந்தன. சுள்ளென்று அடித்த வெயிலைப் பார்த்தபோது, இன்னும் இரண்டே நாட்களில் அந்தப் பள்ளத்தில் தேங்கியிருக்கும் தண்ணீரும் வற்றிவிடும், அந்த மீன்களும் இறந்துவிடும் என்று அவருக்குப் பட்டது.

''இந்த மீன்களைக் காப்பாற்ற வேண்டுமே; என்ன செய்யலாம்?'' என்று சங்கராசாரியார் யோசிக்கலானார்.

அப்பொழுது, தங்கள் கிராமத்துக்குச் சங்கராசாரியார் வந்திருக்கிறார் என்பதை அறிந்த கிராமவாசிகள் அவரைக் காணக் கூடினார்கள்.

''சுவாமி! இந்தப் பக்கத்தில் மழைபெய்து பல மாதங்களாகின்றன. அது காரணமாக நீர்நிலைகள் வற்றிவிட்டன. வயல்களை உழுது பயிரிட முடியவில்லை. நாங்கள் எல்லோரும் அன்ன ஆகாரமின்றித் தவித்துக்கொண்டிருக்கிறோம். மழை வருவதற்குத் தாங்கள்தாம் ஏதாவது உபாயம் சொல்ல வேண்டும்'' என்று சொன்னார்கள்.

அதற்குச் சங்கராசாரியார், ''நீங்கள் அந்தக் கருணாமூர்த்தி பகவானைத் திருப்தி பண்ணுங்கள். அவர் உங்களுக்கு உடனே மழையைக் கொடுப்பார்'' என்றார்.

''அவரை எப்படித் திருப்திப்படுத்துவது? அதற்கு உரிய வழியையும் தாங்கள்தாம் சொல்ல வேண்டும்'' என்று அவர்கள் கேட்டார்கள்.

அதற்குச் சங்கராசாரியார், ''இந்தக் குழியிலுள்ள மீன்கள் இன்றோ நாளையோ சாகும் நிலையில் உள்ளன. இவற்றின் மீது நீங்கள் இரக்கம் காட்டினால் பகவான் உங்கள்மீது இரக்கம் காட்டுவார்'' என்றார்.

''எங்களை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

"இந்த மீன்கள் சாகாதபடி இந்தக் குழியில் நிறையத் தண்ணீர் கொண்டு வந்து கொட்டுங்கள்."

"நாங்கள் தண்ணீருக்கு எங்கே போவது? இங்கு எங்கும் தண்ணீர் கிடையாதே!"

சங்கராசாரியார் பதில் சொல்லாமல் எழுந்தார். தம் சிஷ்யர்களுடன் நடந்து சென்றார். மக்களும் அவரைத் தொடர்ந்தார்கள்.

சீக்கிரம் ஒரு கிணறு தென்பட, சங்கராசாரியார் அந்தக் கிணற்றிலிருந்து ஒரு வாளி தண்ணீர் இழுத்துக் குளத்தில் கொண்டு போய்க் கொட்டினார்.

இதைப் பார்த்ததும் மக்கள் எல்லோரும் ஆளுக்கு ஒரு வாளி தண்ணீர் இழுத்துக் குளத்தில் கொண்டு போய்க் கொட்டினார்கள்.

மக்கள் இப்படிச் செய்துகொண்டிருந்தபோது வானத்தில் திடீரென்று கருமேகங்கள் சூழ்ந்தன. இடியும் மின்னலும் கலந்து மழை கொட்டுக் கொட்டென்று கொட்டியது.

நாம் மற்றவர்கள் மீது இரக்கம் காட்டினால்தான் பகவான் நம் மீது இரக்கம் காட்டுவார் என்பதை மக்கள் உணர்ந்தார்கள்.

## கருணை

க. கனகராசா

கடந்த நூற்றாண்டில் 'மகாஸ்மசானம்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற காசி நகரில் திரைலிங்க சுவாமிகள் என்ற முதிய சந்நியாசி ஒருவர் இருந்தார். அவர் நீண்ட காலம் மௌன விரதம் அனுஷ்டித்து வந்தார். உணவு உட்கொள்ளாமலும் நீரும் பருகாமலும் அவர் பல நாள் தியானத்தில் ஈடுபடுவது உண்டு.

தியான முடிவில் அன்பர் கொடுக்கும் பாலை அவர் பணிவுடன் பெற்றுப் பருகுவார்.

ஒரு முறை கொடியவன் ஒருவன் சுவாமியிடம் சுவருக்கு வெள்ளையடிப் பதற்குக் கலந்த சுண்ணாம்புக் கலவையை வைத்தான். சுவாமிகள் புன்சிரிப்போடு அதை மடமடவென்று பருகினார்.

சுவாமி பால் என்று நினைத்துப் பருகினார் என்று நினைத்துக்கொண்டு நின்ற கொடியவனின் வயிறெல்லாம் எரிந்தது. துடித்துத் துடித்துக் கதறி அவன் சுவாமியின் காலடியில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினான்.

சுவாமிகள் மௌனம் கலைந்து, "அன்பனே, நீ இறைவன் எங்கும் இருக்கிறார் என்பதை மறந்தாய். நீ என்னில் வேறானவன் என்பதை மறந்தாய். என் வயிற்றில் இறைவன் இருக்கிறான் என்பதை நினைக்கவில்லை. சரி, நீ போ" என்றார்.

அவ்விதம் சுவாமிகள் கூறியதும், அவரது கருணை காரணமாக அந்தக் கொடியவனுக்கு வயிற்றெரிச்சல் தீர்ந்து பூரண சுகம் உண்டாயிற்று. அவன் தீய செயல்களை விட்டுத் திருந்தி நல்லவனானான்.

# கீதைச் சிந்தனைகள்

சுவாமி ராகவேசானந்தர்

கீதையில் காட்டப்படுகிற அர்ஜுனன் புனிதமான ஓர் ஆத்மாவோ அல்லது பாவமே உருவான ஓர் பாவியோ அல்ல. உலகின் துன்பம் துயரங்களிலிருந்து விடுபடுவதற்காகப் போராடுகிற ஓர் ஆத்மா. அவன செயல்வீரன். பகைவர்களைத் தன் வலிமையால் தூள்தூளாக்கும் ஓர் மாவீரன். மனைவி மக்கள் என்று இல்லற வாழ்வை ஏற்று உலகில் வாழும் இல்லறவாசி. ஆனால் அவன், உலகில் தன் கடமை எது என்பதையும், வாழ்வின் இலட்சியம் எது என்பதையும் அறிந்துகொள்ளாமல் குழப்பம் அடைகிறான். இந்தக் குழப்பத்திலிருந்து விடுபட்டு அமைதியும் ஆனந்தமும் அடைய வழி தேடித் துடிக்கிறான்.

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையே பாரதத்தில் நடைபெற்றதாகக் கூறப்படும் போர் மனிதமனம் ஒவ்வொன்றிலும் நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெறுகிற போராக உருவகம் செய்யப்படுகிறது. நமது மனதில் இந்த இரண்டுக்கும் எப்போதும் போராட்டம் நடந்தபடியே இருக்கிறது. அந்தப் போரில் நாம் தர்மத்தின் பக்கம் இருந்தால் பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுடன் எப்போதும் இருந்தது போல் எப்போதும் நம்முடன் இருக்கிறார். அர்ஜுனனை ஆபத்துக்களிலும் துன்பங்களிலிருந்தும் காப்பாற்றியது போல் நம்மையும் காப்பாற்றுகிறார்.

ஒரு முறை பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், 'கீதையின் பிழிந்தெடுத்த சாரம் என்ன?' என்று கேட்டபோது அவர், 'கீதா, கீதா' என்ற வார்த்தையை வேகமாகப் பல முறை சொல்லும்படி கூறினார். அப்படிச் சொல்லும்போது, 'தாகீ! தாகீ!' என்று வரும். 'இதுதான் கீதையின் சாரம்; கீதை முழுவதும் பலவாறாகக் கூறப்படும் கருத்து இது ஒன்றுதான்' என்று அவர் கூறினார்.

மேலும் இதை அவர் விளக்கும்போது, 'தாகீ' என்பது தியாகி என்ற சொல்லின் சுருக்கம். தியாகி என்றால் துறவி—துறவு என்பது பொருள். 'ஆசைகள் அனைத்தையும் துறந்துவிடு. இதுதான் கீதையின் திரண்ட உபதேசம்' என்றார். கீதை முழுவதும் அதன் ஒவ்வோர் அத்தியாயத்திலும், ஒவ்வொரு சுலோகத்திலும், வார்த்தையிலும், எழுத்திலும், இந்தத் தியாகம் என்பதே விரவிப் பரவிக் கிடக்கிறது.



ஆன்மிக வாழ்வின் துவக்கமாகவும், நடுப் பகுதியாகவும், முடிவாகவும் இருப்பது தியாகம் ஒன்றுதான். தியாகம் என்பது இல்லற வாழ்வை விட்டுச் சந்நியாச வாழ்விற்கு ஓடிவிடுவது அல்ல.

துறவறம் என்பது பற்றுக்கள், துன்பங்கள், துயரங்கள் அனைத்திற்கும் அடிப்படையான 'நான்' என்னும் அகந்தையிலிருந்து விடுபடுகிற ஒரு நிலைதான். வேறு வார்த்தையில் சொன்னால், தேவையில்லாத உலகப் பொருள்கள் மீது ஆசைப்படுவதிலிருந்தும், சுய நலத்திலிருந்தும் விடுபடுவதுதான் சந்நியாசம், துறவு, தியாகம். 'தனக்கு வேண்டும், தானே பெரியவன், தானே நல்லவன். தானே தானே' என்று எல்லாமே தானாக நினைக்கும் இந்த நினைவிலிருந்து விடுபடுவதுதான் சந்நியாசம், தியாகம்.

அர்ஜுனன் க்ஷத்திரியன். க்ஷத்திரியனான அவன் போரிடும் தன் கடமையிலிருந்து ஓடிப்போய்த் தப்பித்துக்கொள்வதற்காகச் சந்நியாசியாகிவிட விரும்புகிறான். இதைக் கண்ட கிருஷ்ணர் மிகக் கடுமையான சொற்களில் அவனைக் கண்டிக்கிறார். 'நீ ஆணும் அல்ல, பெண்ணும்

அல்ல; கீழ்த்தரமான ஒரு பேடியாகிவிட்டாய்' என்று அவனை ஏசுகிறார். 'வீரனாகிய உன் கடமை போர் புரிதலே' என்று அவனைப் போர்புரியும்படி வலியுறுத்துகிறார்; 'கோழையாகிவிடாதே' என்று கூறுகிறார்.

நாம் உடலிலும் மனதிலும் ஆன்மிகத்திலும் முழுமையாக வளர்ந்து முழு மனிதனாக—உண்மையான மனிதனாக ஆனபிறகு மட்டுமே, நம்மிடம் உள்ள அனைத்தையும் பகவான் திருவடிகளில் அர்ப்பணம் செய்யும் வலிமையையும் தகுதியையும் பெறுகிறோம். 'அர்ஜுனா! முதலில் உண்மையான, முழுமையான மனிதனாக மாறு' என்று கூறுவதிலிருந்து, பகவான் தம் கீதை உபதேசத்தைத் துவக்குகிறார்.

கீதையின் நான்காம் அத்தியாயமான ஞானகர்ம சந்நியாச யோகத்தில் கிருஷ்ணர், 'நீ உயர்வடைய வேண்டும் என்றால் அது உன் ஒருவனால்தான் முடியும். நீதான் உன் நண்பன். நீதான் உன் பகைவன்' என்று கூறுகிறார்.

இப்படிக் கூறும் கிருஷ்ணரின் தெய்விக உபதேசங்களை எல்லாம் புரிந்துகொண்டு, அதைத் தன் எலும்போடு எலும்பாகவும், இரத்தத்தோடு இரத்தமாகவும் கரைத்துக்கொண்டு அர்ஜுனன் முழுமையான மனிதனாக-உண்மையான மனிதனாக-பலம் வாய்ந்த மனிதனாக மாறியபிறகு கிருஷ்ணர் அவனிடம், 'உனது எல்லாவற்றையும்—உன் சொந்தம், சுற்றம், நன்மை, தீமை, உடல், உயிர் எல்லாவற்றையும்—என்னிடத்தில் சரணாகக் கொடுத்துவிடு. என் திருவடிகளில் உன் பாதுகாப்பைத் தேடிக்கொள். நான் உன்னை மரணம் முதலான எல்லாவற்றிலிருந்தும் காப்பாற்றுகிறேன்' என்று கூறுகிறார். இதுதான் கீதையின் சாரம்.

மனிதன் வளர வேண்டும். தன்னிடத்தில், தன் ஆற்றலில் அசைக்க முடியாத நம்பிக்கையை அவன் பெற வேண்டும். தன் ஆற்றலில் உறுதியான நம்பிக்கையைக் கொள்ள வேண்டும். இத்தகைய ஆற்றல்கள் அனைத்தையும் முதலில் அவன் முழுமையாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். பிறகு இந்த ஆற்றல்கள் யாவும் கடவுளின் எல்லையற்ற கருணையினாலேயே தனக்குக் கிடைத்தன என்ற சத்தியமான உண்மையையும் உணர வேண்டும். பிறகு இவை அனைத்தையும், தன்னையும், தன்னைச் சார்ந்த ஒவ்வொரு துளியையும் பகவானின் திருவடிகளில் அர்ப்பித்துவிட்டு, எதைப் பற்றியுமே கவலைப்படாமல், சின்னஞ்சிறு குழந்தையைப் போல் பகவானின் கைகளில் தங்கிவிட வேண்டும். இதுதான் கீதை காட்டும் பாதை, போதனை, உபதேசம் எல்லாம்.

பகவானின் விச்வரூப வடிவத்தைக் கண்ட அர்ஜுனனுக்குக் குழப்பம் ஏற்பட்டது. இதற்கு முன்பு கிருஷ்ணர் தாம் உபதேசித்த ஞானயோகம், ராஜயோகம் மூலம், 'பகவான் ஞானமயமானவர், ஒளிமயமானவர்' என்று கூறியிருந்தார். இப்போது தன் கண்ணெதிரே பகவானின் பெரிய வடிவத்தை அவன் கண்டதும் அவனுக்குப் பெருங்குழப்பம் ஏற்பட்டது. 'கடவுள் உண்மையில் ஞானமாகவும் ஒளியாகவும் இருக்கும் உருவம் அற்றவரா? இல்லை, நான் இப்போது கண்டபடி அண்ட சராசரங்களும் தம்முள் இருக்கிற பெரிய உருவத்தைப் படைத்தவரா?' என்ற சந்தேகமும், 'இதில் நான் எதை வணங்குவது? உருவமுள்ள கடவுள்மீது தியானம் செய்வதா? உருவற்ற கடவுள்மீது தியானம் செய்வதா?' என்ற குழப்பமும் மயக்கமும் ஏற்பட்டன.



இந்தக் குழப்பம் அர்ஜுனன் காலத்தில் அர்ஜுனனுக்கு மட்டுமல்ல; அவன் காலத்திலும், அவனுக்கு முன்னும் பின்னும், நேற்றும் இன்றும் இருந்து வரும் குழப்பமாகும். எத்தனையோ

துன்பம் வரும்போது ஓராயிரம் முறை இறைவனை நினைப்பதைவிட, இன்பமாக இருக்கும் போது ஒரே ஒரு முறை இறைவனை நினைப்பது சாலச் சிறந்தது. —ஒரு பக்தர்

மகான்கள் எவ்வளவோ காலமாக இதுபற்றித் தீர்க்கமாக உபதேசம் செய்திருந்தும், 'கடவுள் உருவம் உள்ளவரா இல்லையா?' என்ற குழப்பம் இன்னும் தீர்ந்தபாடில்லை. இதனுல் ஏற்பட்ட, ஏற்பட்டுக்கொண்டிருக்கிற கலவரங்களுக்கும் அழிவுகளுக்கும் கணக்கே இல்லை. 'உருவக் கடவுளை வணங்குபவனுக்கு மோட்சம் கிடைக்குமா? கிடைக்காதா?' என்ற தர்க்கமும் ஆரவாரமும் சண்டையும் ஓய்ந்தபாடில்லை. அர்ஜுனனும் இத்தகைய சந்தேகத்தால் பீடிக்கப்பட்டு, பகவானிடம், 'உருவக் கடவுளை வணங்குபவர்கள், உருவமற்ற கடவுளை வணங்குபவர்கள் ஆகிய இரண்டு பேரில் யோகத்தை நன்கு அறிந்தவர் யார்? கடவுளை அடைபவர் யார்?' என்று கேட்கிருன். கிருஷ்ணர் அர்ஜுனனுக்குத் தெளிவாக, 'உருவக் கடவுள், அருவக் கடவுள் ஆகிய இரண்டை வணங்குபவர்களும் ஒரே கடவுளை அடைகிருர்கள்' என்பதை உபதேசிக்கிருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கூறினர்—கடவுள் உருவம் உள்ளவர். அதே நேரத்தில் உருவம் இல்லாதவர். உதாரணமாகத் தண்ணீரை எடுத்துக்கொள். தண்ணீராக இருக்கும்போது அதற்கு நிலையான வடிவம் இல்லை. அந்தத் தண்ணீரைக் கெட்டிப்படுத்தினுல் நிலையான பனிக்கட்டியாக மாறுகிறது; ஓர் உருவத்தை அடைகிறது. அந்தப் பனிக்கட்டியை உருக்கித் தண்ணீராக்கி அதைக் கொதிக்க வை. கொஞ்சம் கொஞ்சமாக ஆவியாகிறது. உருவமே இல்லாமற் போய்விடுகிறது.

தண்ணீர் என்னும் ஒன்றுதான் உருவம் உள்ள பனிக்கட்டியாகவும் மாறுகிறது; உருவம் அற்ற ஆவியாகவும் மாறுகிறது. தண்ணீருக்குத் தனக்கென்று ஒரு நிலையான வடிவம் இல்லை. எந்த எந்தப் பாத்திரத்தை, இடத்தை அடைகிறதோ அதற்கு ஏற்பத் தன் வடிவத்தை நீளமாகவோ குறுகலாகவோ ஆழமாகவோ அமைத்துக்கொள்கிறது. கடவுளும் இயல்பில் இதுபோல் இருக்கிருர். கடவுளுக்கு உருவம் வேண்டும் என்று நினைத்துப் பக்தர்கள் தங்கள் பக்தியால் அவரைக் கெட்டிப் படுத்தும்போது, தண்ணீர் பனிக்கட்டியாகி, உறுதியான வடிவம் பெறுவது போல், கடவுளும் ஒரு வடிவத்தை எடுத்துக்கொள்கிருர். மற்றும் சில பக்தர்கள் தங்கள் ஞானத்தாலும் தியானத்தாலும் கடவுளை உருவமற்றவராகப் பாவித்துப் பார்க்கும்போது, தண்ணீர் நெருப்பில் எரிக்கப்பட்டு ஆவியாக மாறுவது போல், அவர்களின் ஞானத்தாலும் தியானத்தாலும் உருவை இழந்து உருவமற்றவராக அவர்களுக்குக் காட்சி தருகிருர். ஆனுல் உண்மையில் கடவுள் இந்த மூன்ருகவும் இருக்கிருர். இந்த மூன்று நிலைகளையும் கடந்தவராகவும் இருக்கிருர் என்று கூறினர்.

கண்ணன், 'அர்ஜுன! என்னைப் பொறுத்தவரையில் உருவமற்ற கடவுள்மீது மனதை நிலைநிறுத்தி, ஆழ்ந்த தியானத்தில் மூழ்குவதுதான் சிறந்தது' என்று கூறினர்.

ஆனுல் அர்ஜுனனுல் உடனடியாக இதை ஏற்றுக்கொள்ள இயலவில்லை. இதை அறிந்த கிருஷ்ணர் உடனே, 'யார், கண்ணுக்குப் புலப்படாதவரும், இப்படி இருப்பார் என்று கூற முடியாத வரும், மாற்றமே இல்லாதவருமான கடவுளை, ஓர் உருவத்தின் மூலமாக வைத்து வழிபாடு செய்கிருர்களோ, அவர்களும் நிச்சயமாக என்னையே அடைகிருர்கள்' என்று கூறினர்.



## இது என்ன நியாயம் ?

சிவபெருமானே ! நீ வைகை ஆற்றில் அணைகட்ட வந்தாய். பிரம்படி பட்டாய். அந்த அடியை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்தாய். அதே சமயத்தில் வாணிச்சியின் பிட்டைச் சாப்பிட்டாய். அந்தப் பிட்டை ஏன் பங்கிட்டுக் கொடுக்கவில்லை? அடி மட்டும் எல்லோரும் பட வேண்டும்? தின்பண்டங்களானுல் பங்கிடக் கூடாதோ ?

—அப்பைய தீக்ஷிதர் இயற்றிய சிவலீலார்ணவம்

# துளசிதாசரின் உள்ளம்

தமிழில் : எஸ். பி. ராஜகுமாரி

ராமா! எப்போதும் எல்லா வகையிலும் நான் உன் தாசனுகவே இருக்க விரும்புகிறேன். ஆனுல் இங்கே கலிகாலம் அவ்வப்போது என் தலைவணுகிக்கொண்டு வருகிறது.

காலம், கர்மம், ஐம்புலன்களின் இச்சை என்ற முதலேகள் என்னேச் சூழ்ந்திருக்கின்றன. இவற்றிற்கு அடிமையாக நான் உடன்படவில்லே. என்ருலும் பலாத்காரமாக அவை என்னே வாங்க விலே பேசிக்கொண்டிருக்கின்றன.

பெரும் புகழுக்கு உரிய உன் திருநாமம் பந்தங்களேத் தகர்த்து விடுதலே அளிக்க வல்லது.

நான் என்னே விலே பேசுபவற்றிடம், ''நான் ஏற்கனவே ஸ்ரீராமசந்திரனுக்கு விற்கப்பட்டு விட்டேன். நான் அவரது அடிமை'' என்று தெரிவித்தேன். ஆயினும் அவை என்னிடம் கபடமாக அன்பு செலுத்தி என் இதயத்தில் நிலேத்து நிற்க இடம் கேட்டன.

இந்த உலகில் கலியுகத்தின் ஆரவாரங்களுக்கு நடுவில் உன் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். இப்போது இந்த அடிமையைக் காத்தருள்வாயாக. இல்லாவிட்டால் உனது இந்தச் சேவகன் இருக்கும் இடம் தெரியாமல் கலியுகம் அழித்துவிடும்.

பிரபுவே! எவ்விதம் ஆந்தையின் வழக்கையும் நாயின் வழக்கையும் தீர்த்து வைத்தாயோ அது போலவே இந்தக் கலியுகத்திடம், 'துளசி என்னுடையவன்' என்று சொல்லி என் வழக்கையும் தீர்த்து வைப்பாயாக.

* * *

துளசிதாசர் தமது இந்தப் பிரார்த்தனேயில் ஆந்தையின் வழக்கு, நாயின் வழக்கு என்று இரண்டு நிகழ்ச்சிகளேக் குறிப்பிடுகிருர். அவை பின்வருமாறு—

## ஆந்தையின் வழக்கு

ஒரு சமயம் ஆந்தையும் கழுகும் ஒரே கூட்டில் வசித்து வந்தன. ஒரு நாள் இரண்டுக்குமிடையில் சச்சரவு ஏற்பட்டது. அது காரணமாக ஒன்றை மற்ருென்று வெளியேறும்படி கூறியது.



இறுதியில் இரண்டும் ஸ்ரீராமரிடம் சென்று முறையிட்டன. ஸ்ரீராமர் ஆந்தையிடம், ''கூடு யாருடையது? நீ எப்போதிலிருந்து அங்கே வசிக்கிருய்?'' என்று வினவினர்.

ஆந்தை, ''மரங்கள் எப்போது தோன்றினவோ அப்போதிலிருந்தே நான் கூட்டில் வசித்து வருகிறேன்'' என்று பதில் கூறியது.

அடுத்து இராமபிரான் ஆந்தையிடம் கேட்ட அதே கேள்வியைக் கழுகிடமும் கேட்டார். அதற்குக் கழுகு, ''மனித இனம் தோன்றியது முதற்கொண்டு நான் இந்தக் கூட்டில் இருக்கிறேன்'' என்று பதில் கூறியது.

ஸ்ரீராமர் தமது தீர்ப்பாகக் கழுகிடம், ''மரங்களின் தோற்றம் மனித இனத்தைவிட

முந்தியது. எனவே கூடு ஆந்தைக்குத்தான் சொந்தம். ஆதலால் கூட்டை நீ காலி செய்து விடு'' என்றார்.

## நாயின் வழக்கு

ஒரு நாள் ஸ்ரீராமரின் சபைக்கு ஒரு நாய் அழுதுகொண்டே வந்தது. தீர்த்தசித்தன் என்ற பிராம்மணன், நிரபராதியான தன்னை அடித்து விட்டான் என்று அது ஸ்ரீராமரிடம் முறை யிட்டது.

ஸ்ரீராமர் பிராம்மணனை அழைத்து நாயை அவன் அடித்ததற்கான காரணத்தை வினவினார்.

பிராம்மணன், ''நான் பிச்சை கேட்டுக் கொண்டிருந்தபோது இந்த நாய் இடையில் இருந்தது. ஆதலால் அதைத் தள்ளினேன். தள்ளியும் நகராததனால் அதை அடித்தேன்'' என்றான்.

பிராம்மணன் மீது தவறில்லை என்று உணர்ந்த பகவான் நாயிடமே, ''இந்தப் பிராம்மணனுக்கு என்ன தண்டனை தரலாம்?'' என்று கேட்டார்.

இறுதியில் நாயின் விருப்பப்படியே அந்தப் பிராம்மணனைக் காலிஞ்ஜரின் மடாதிபதியாக்கி இருவருடைய பிரச்னையையும் ஸ்ரீராமர் தீர்த்து வைத்தார். ○

## கும்பனதாஸ்

அக்பர் காலத்தில் கும்பனதாஸ் என்ற சிறந்த கிருஷ்ணபக்தர் இருந்தார். தினம் கோவிலுக்குச் சென்று வீணை, மிருதங்கம் இவற்றுடன் பகவானைப் பாடுவது இவர் வழக்கம்.

ஒரு நாள் இவர் பகவானைப்பற்றிப் பாடிக்கொண்டிருந்தபோது அந்தக் கோவிலுக்கு மகாராஜா மான்சிங் வந்தார். மகாராஜா மான்சிங் அக்பருக்கு மிகவும் நெருங்கிய நண்பர்.

கும்பனதாஸின் பாட்டைக் கேட்டதும் மான்சிங் அப்படியே மனம் உருகினார். கும்பனதாஸை அவர் வீட்டில் கண்டு, அவருக்கு ஏதாவது உதவி புரிய வேண்டுமென்று மான்சிங் நினைத்தார்.

அடுத்த நாள் கும்பனதாஸைத் தேடி மகாராஜா மான்சிங் அவர் வீட்டிற்குச் சென்ற சமயம் கும்பனதாஸ் நீராடி விட்டு, நெற்றிக்கு இட்டுக்கொள்வதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். அரசர் அவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நின்றார்.

மன்னரை வரவேற்றுவிட்டு, கும்பனதாஸ் நெற்றிக்கு இட்டுக்கொள்வதற்காகத் தம் சகோதரனின் மகளைக் கூப்பிட்டு, ''என் கண்ணாடியையும், உட்காரும் ஆசனத்தையும் கொண்டுவா'' என்று சொன்னார்.

அதற்கு அவள், ''உங்கள் கண்ணாடியை யாரோ குடித்து விட்டார்கள். ஆசனத்தை மாடு தின்று விட்டது'' என்று சொன்னாள்.

இதைக் கேட்ட அரசர் திகைத்து நின்றார். ''கண்ணாடியை எப்படிக் குடிக்க முடியும்? ஆசனத்தையும் எப்படித் தின்ன முடியும்?'' என்று வியந்தார்.

அவர் திகைப்பைக் கவனித்த கும்பனதாஸ், ''பாத்திரத்தில் உள்ள தண்ணீர்தான் என் கண்ணாடி, வைக்கோல் புரிதான் என் ஆசனம்'' என்று சொன்னார்.

கும்பனதாஸின் எளிய வாழ்க்கையைக் கண்டு வியந்த அரசர், அவருக்குத் தங்க நிலைக் கண்ணாடியைக் கொடுத்தார்.

அதற்குக் கும்பனதாஸ், ''இந்தச் சின்னக் குடிசைக்கு எதற்காக இந்தத் தங்கக் கண்ணாடி? இதை யாராவது திருடர்கள் திருடிக்கொண்டு போனாலும் போய்விடுவர்'' என்றார்.

''அப்படியானால் இந்தக் கிராமத்தைத் தங்களுக்கு ஜாகீராகக் கொடுக்கிறேன், வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார் மன்னர்.

அதற்குக் கும்பனதாஸ், ''பகவானுடைய அருள்தான் எனக்கு ஜாகீர். ஆகவே எனக்கு ஒரு கிராமமும் வேண்டாம்'' என்றார்.

''அப்படியானால் இந்தப் பணத்தையாவது வைத்துக் கொள்ளுங்கள்'' என்று ஒரு பண முடிப்பைக் கொடுத்தார் மன்னர்.

''அரசே! செல்வம் எனக்கு இங்குள்ள முள்செடியைப் போன்றது. ஆகவே இந்தப் பணப்பையைத் திருப்பி எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார் கும்பனதாஸ்.

இப்படியும் எளிய வாழ்க்கை வாழ்கிறவர்கள் இருப்பார்களா என்று அரசர் அதிசயித்து நின்றார்.

—நாடோடி




## விலங்குகளின் நன்றி உணர்ச்சி

இலங்கைத் தீவில் அடர்ந்த காடுகளுக்கிடையே யானைகள் கூட்டம் கூட்டமாகத் திரியும். அந்தக் காட்டில் ஒரு பெரிய முருகன் கோயில் இருக்கிறது. இலங்கையில் உள்ள பௌத்தர்களும் அந்த முருகன் கோயிலுக்கு வந்து அங்கு எழுந்தருளியிருக்கும் முருகனை வழிபட்டு வந்தனர்.

உற்சவ நாட்களில் அனைவரும் அந்தக் காட்டிற்கு வந்து முருகனை வணங்குவது வழக்கம். வெளிநாட்டவர்களும் வருவது உண்டு. கொடிய விலங்குகள் வாழும் அடர்ந்த காடுகள் உற்சவ காலங்களில் நகரங்களைப் போல் தோன்றும். அப்போது பாதையின் இருபுறமும் இரவு பகலாகச் சூடம் எரிந்துகொண்டே இருக்கும். அந்தப் புகையினால் காடுகளே கருநிறத்தைப் பெற்றுவிடும். அவ்விதம் அங்கே சூடத்தை எரித்து முருகனை வழிபடுவது வழக்கமாக இருந்தது.



முருகன் கோயிலருகில் அன்னை பார்வதிதேவியின் கோயிலும் இரண்டு மூன்று சிறிய விடுதிகளும் இருந்தன. அந்த விடுதிகளில், கோயிற் பூசாரிகள் இருப்பர். ஆண்டிற்கு ஒரு முறை நடைபெறும் உற்சவத்தின்போது கிடைக்கும் வருவாயிலிருந்து கோயிலின் பூசையும், பூசாரிகளின் வாழ்க்கையும் நடைபெற்று வந்தன.

திருவிழா நாட்களைத் தவிர மற்ற நாட்களில் எவரும் துணிந்து அந்தக் காட்டிற்குள இருக்கும் முருகன் கோவிலுக்குச் செல்வதில்லை. பூசாரிகள் நகரத்திற்கு செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டால் காலையில் சென்று மாலைக்குள் திரும்பி வந்துவிடுவார்கள்.

சில சமயம் யானைகளைப் பிடிக்கும் தொழிலாளர்கள் அந்தக் காட்டிற்கு வருவார்கள். தக்க ஆயுதங்களோடு குறிப்பிட்ட இடங்களில் இருந்துகொண்டு கவனத்துடன் அவர்கள் யானைகளைப் பிடிப்பார்கள். குட்டிகளுடன் இருக்கும் யானைகளைப் பிடிப்பது மிகவும் கடினமான செயலாகும். குட்டிகளைப் பிடிக்கப் போகும் பாகர்கள் பல சமயங்களில் பலவித இன்னல்களில் சிக்கியதுண்டு.

சுஜான்சிம்மன் என்பவன் ஒரு நாள் யானைக் குட்டிகளைப் பிடிக்கச் சென்றான். ஒரு சமயம் தகுந்த ஆயுதமின்றிக் காட்டிற்குள் நுழைந்து விட்டான். திரும்பி வரும்போது எதிரில் யானைகள் கூட்டமாக வருவதைக் கண்டான். யானையைப் பிடிக்கச் சென்ற அவனே இப்போது யானைகளிடம் சிக்கிக்கொண்டான்.

யானைகளின் பார்வையிலிருந்து தப்பி ஓடுவதற்கோ, திரும்பிச் செல்வதற்கோ, மறைந்து கொள்வதற்கோ வழி ஏதும் இல்லை என்பதைச் சுஜான்சிம்மன் உணர்ந்தான். முருகபக்தனான அவன் தன்னைக் காப்பாற்றும்படி முருகனிடம் முழுமனதோடு பிரார்த்தித்தான். திக்கற்றோருக்குத் தெய்வத்தைத் தவிர வேறு துணை ஏது?

அந்தக் கூட்டத்தில் ஒரு யானைக்குட்டி முதலில் வந்து கொண்டிருந்தது. அது திடீரென்று கூவிற்று. உடனே மற்ற யானைகள் திடுக்கிட்டு நின்றுவிட்டன. அருகில் இருந்த சுஜான்சிம்மன் என்ன நடந்திருக்கும் என்பதைச் சுலபமாகப் புரிந்துகொண்டான். தான் நினைத்தது போலவே யானைக் கூட்டத்தின் தலைவனான யானை சேற்றில் சிக்கிக்கொண்டதைக் கண்டான். அந்தச் சேற்றை மனிதர்கள் எளிதில் கடந்துவிடலாம். ஆனால் யானைகள் கடக்க முடியாது.

விலங்குகளுக்குள் அதிக அறிவு படைத்தது யானை என்பதை அறிந்த சுஜான்சிம்மன், சில மரக் கிளைகளை ஒடித்துச் சேற்றில் போட்டான். அதனைப் பார்த்த மற்ற யானைகளும் அவன் செய்வதைப் போலவே கிளைகளை ஒடித்துச் சேற்றில் போட்டன. பிறகு மெதுவாக அவை தமது துதிக்கைகளினால் சேற்றிலிருந்த யானையைத் தூக்கி வெளியேற்றின.



யானையைத் தப்பச் செய்தபிறகு தன் நிலைமை என்ன ஆகும் என்பது சுஜான்சிம்மனுக்கு நன்றாகத் தெரியும். ஆயினும் யானைத் தலைவன் படும் துயரத்தையும், மற்ற யானைகள் தம் தலைவனுக்காக வருந்தும் காட்சியையும் கண்ட சுஜான்சிம்மனின் மனம் இளகிவிட்டது. ஆகவே அவன் தனக்கு நேரப்போகும் ஆபத்தை யும் பொருட்படுத்தாமல் அந்த யானைக்கு உதவி செய்தான்.

யானைகள் அனைத்தும் ஒரு முறை சுஜான் சிம்மனை உற்று நோக்கின. ஆனால் அந்தப் பார்வையில் அன்பு ததும்பிற்று. அவை உற்சாகத்துடன் புதிய முறையில் சப்தமிட்டுத் திரும்பிச் சென்றன.

சுஜான்சிம்மனும் திரும்பினான். புதரில் வைத்திருந்த யானைகளைப் பிடிக்கும் கருவிகளை எடுக்காமல், துப்பாக்கியை மட்டும் தோளில் வைத்துக்கொண்டு புறப்பட்டான். யானையைப் பிடிக்கும் எண்ணத்தை அறவே கைவிட்டு, முருகன் கோயிலை நோக்கிச் சென்றான்.

நாட்கள் கழிந்தன. மறுபடியும் சுஜான் தற்செயலாக ஒரு யானைக் கூட்டத்தைக் கண்டான். யானைகள் இவனை நோக்கி ஓடி வந்தன. வேறு வழியின்றித் துப்பாக்கியை எடுத்துச் சுட்டான். ஆனால் சேற்றுப்பாங்கான பூமியின் அருகில் இருந்ததனால் குண்டு ஈரமாகி விட்டிருந்தது. எனவே சத்தம் செய்ததுடன் துப்பாக்கியின் வேலை ஓய்ந்தது. குண்டு ஈரமாகி யிருந்ததைத் தான் கவனிக்காததால் துப்பாக்கி வேலை செய்யவில்லை என்பது சுஜானுக்குப் புரிந்தது. ஏமாந்த பிறகு வேறு வழி இல்லாததை உணர்ந்த அவன் பூமியில் தடால் என்று விழுந்தான். பிணம் போல் மூச்சற்றுப் படுத்திருந்தான்.

கரடிகளை ஏமாற்றும் இந்த முறையினால் யானைகள் ஏமாறவில்லை. அவை தம் கால்களை, சுஜானின் மேலே வைத்திருந்தால் அவன் கதி என்ன ஆகியிருக்குமோ? முருகனுக்குத்தான் அது தெரியும். சுஜான் மனதிற்குள்ளாக முருகன் திருநாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தான். யானை அருகில் வந்து துதிக்கையினால் சுஜானைத் தூக்கியது. அடுத்து அது அவனை என்ன செய்யுமோ? யாருக்குத் தெரியும்? சுஜானை யானை தூக்கியதைப் பார்த்த மற்ற யானைகள் கூச்சலிட்டன. அதற்குள் சுஜானைத் தூக்கிய யானைத்தலைவன் துதிக்கையை மேலே உயர்த்தி, சுஜானைத் தன் முதுகின்மீது அமர்த்திக்கொண்டது. 'சேற்றில் சிக்கிய யானையே இது' என்பது சுஜானுக்கு அப்போதுதான் தெரிந்தது. சுஜானுடைய உள்ளத்தில் ஒரு புறம் பயமும் மறுபுறம் நம்பிக்கையும் தோன்றின.

யானை தன் இனத்துடன் அவனைத் தூக்கி வைத்தபடி முருகன் கோயிலை நோக்கிச் சென்றது. கோயிலின் பூசாரி ஒருவர் மகாத்மாவாக இருந் தார். அவர் விலங்குகளோடு மிகவும் அன்போடு பழகி வந்தார். அது காரணமாக அவற்றின் நட்பையும் அவர் பெற்றிருந்தார். அந்தக்

கோயிலின் அருகில் எந்த விலங்கும் மற்ற மிருகங்களுக்கோ மனிதர்களுக்கோ எந்தவித மான தீமையையும் விளைவித்ததில்லை. காய மடைந்த மிருகங்களும் அங்கு அந்த மகாத்மா விடம் ஓடி வரும். அவரும் அவற்றினிடம் அன்புகாட்டித் தக்க சிகிச்சைகளைச் செய்து அவற்றின் காயங்களை ஆற்றுவார்.



காட்டுயானை தன்னை எந்தப் பாடுபடுத்துமோ என்று சுஜான் நடுங்கிக்கொண்டிருந்தான். அந்த யானையின் மேலிருந்து எப்படித் தப்புவது என்று தெரியாமல் தவித்தான். குதித்து ஓடு வதோ, மரக்கிளைகளைப் பிடித்துத் தொங்கிவிடு வதோ முடியாத செயலாக அவனுக்குத் தோன்றி யது. ஏனெனில் அவனைச் சுற்றி மற்ற யானைகள் கூட்டமாக அவனைக் கண்காணித்தபடி வந்து கொண்டிருந்தன. மேலும், நட்போடு பழகிவரும் யானையை ஏமாற்றுவதும் தவறு என்று அவன் எண்ணினான்.

கோயிலின் வாயிலுக்கு வந்த யானை சுஜானைக் கீழே இறக்கிப் பூசாரியின் முன்னிலையில் நிறுத்தி யது. பூசாரிக்கே இந்தச் செயல் மிகவும் வியப் பாக இருந்தது. பூசாரியின் கால்களில் விழுந்து வணங்கிய யானை காட்டிற்குள் நுழைந்து மறைந் தது.

சுஜான்சிம்மன் நடந்ததைப் பூசாரியிடம் கூறி னான். 'நான் இனி வேட்டையாடுவதில்லை' என்று அவரிடம் உறுதி அளித்தான். தனக்கு வீடோ உறவினரோ ஏதும் இல்லை எனக் கூறி, அங்கேயே தங்கிவிடப்போவதாகவும் சொன்னான். பூசாரி அவனை முருகனுக்கு வழிபாடு செய்யத் தகுந்தவன் என்று கருதினார். அவனிடம் முருக னுடைய வழிபாட்டை ஒப்படைத்தார்.

உற்சவம் முடிந்து சில தினங்கள் கழிந்தன. கூடம் அங்கங்கே அணையாமல் இருந்தது. எப்படியோ உலர்ந்த சருகுகளின் மூலம் தீ காட்டில் பரவியது. புகை வானத்தின் நிறத் தையே மாற்றிவிட்டது. காட்டு விலங்குகள் பல இடங்களில் திரிந்து முடிவில் கோயிலைச் சுற்றி லும் சூழ்ந்துகொண்டன. திக்கற்றவர்களுக்குத் தெய்வத்தைத் தவிர வேறு துணை ஏது?

சுஜான் ஒன்றையும் அறியாமல் பூஜைகளை முடித்துவிட்டு, வழக்கம் போல் வெளியே வந்தான். அச்சத்தை விளைவிக்கும் காட்டுத் தீ பயங்கரமாகப் பரவியிருப்பதையும், பரிதாபகர மான பார்வையுடன் பலவித விலங்குகள் அங்கு வந்து கூடியிருப்பதையும் கண்டான். முயல் முதல் யானை வரை எல்லாவித விலங்குகளும் அங்கே நடுநடுங்கிக்கொண்டிருந்தன.

தீ தூரத்தில்தான் இருந்தது. என்றாலும் அது அருகில் வருவதற்கு எவ்வளவு நேரம் ஆகும்? என்ன முறையில் இந்த விலங்குகளைக் காப்பாற்ற லாம் என்று தீவிரமாக யோசித்தான். சுற்றிலும் பார்த்தான். முடிவில் கோயிலுக்கும் காட்டுத் தீக்கும் இடையில் அடர்த்தியற்ற ஓர் இடத்தைக் கண்டான். அந்த இடத்திலுள்ள மரங்களையும் செடிகளையும் வெட்டி வீழ்த்தினான். அங்கும் தீ மூட்டி எரியச் செய்தான்.

காட்டுத் தீயை அணைக்கத் தீ வராத இடத்தில் நாமே தீயை இட்டு, அங்குள்ள மரங்களை எரித்துவிட வேண்டும். அவ்வாறு செய்தால் காட்டுத்தீ பிறகு அந்த இடத்திற்கு வந்ததும் எரிக்க விறகுகள் இன்றித் தானே அணைந்து விடும். இந்த முறையை அறிந்திருந்த சுஜான் தீயுள்ள இடத்திற்கு எதிரிலிருந்த இடத்தை நன்றாக எரித்துவிட்டான்.

சுஜான் தீயை அணைக்கும் ஊக்கத்தில் இருந்தான். ஆகவே அவன் தனக்குப் பின்புறத்தில் தீ நெருங்கிவிட்டதைக் கவனிக்காமல் இருந்துவிட்டான். திரும்பிப் பார்த்த சுஜான் ஓடிவிட முடியாத நிலையில் தான் சிக்கிக்கொண்டதை உணர்ந்தான். அதற்குள் அவனது ஆடையில்



தீப்பிடித்துக்கொண்டது. தீக்காயங்களுடன் எப்படியோ சிரமப்பட்டுக் கோயிலின் வாயிற்படிக்குச் சென்றுன். அதற்குள் தன்னுணர்வை இழந்து தரையில் வீழ்ந்தான். ஆனால் சுஜானுடைய முயற்சியினல் காட்டுத் தீ ஓய்ந்தது. விலங்குகளும் காப்பாற்றப்பட்டன.

உணர்வு பெற்ற சுஜான் உடல் முழுவதும் தீக்காயங்களுடன் நிறைந்திருப்பதையும், தன்னைச் சுற்றிலும் யானைகள் நின்றுகொண்டிருப்பதையும் கண்டான். கோயிலில் வேறு மனிதர் ஒருவரும் இல்லை. இந்த நிலையில் இயற்கையன்னையும் விலங்குகளுமே தன்னைக் காத்தன என்பதையும் அறிந்தான்.

உடலில் வலி இருந்தது. அவனல் எழுந்து நடக்க முடியவில்லை. யானைகள் பழங்கள் நிறைந்த கிளைகளைச் சுஜானுடைய முன்னிலையில் கொண்டு வந்து வைத்துப் பணி செய்தன. அவற்றைத் தின்று பசியாறி மெதுவாக அவன் உடலில் வலிமையைப் பெற்றுன்.

பட்டணத்திலிருந்து சில அன்பர்கள் முருகனைத் தொழ வந்தனர். சுஜானை உள்ளே அழைத்துச் சென்று பாதுகாத்தனர். அவன் நன்கு எழுந்து நடமாடத் தொடங்கினுன் என்பதை அறிந்த பிறகே விலங்குகள் அந்த இடத்தை விட்டு அகன்றன.

''இன்றும் ஆண்டிற்கு ஒரு முறை காட்டிலுள்ள ஏனைய விலங்குகளும் கோயிலுக்கு வருகின்றன. தமக்குக் கிடைத்த பழங்களையோ கிழங்குகளையோ கொண்டு வந்து அன்புடன் கோயிலின் வாயிற்படியில் வைத்துச் சிறிது நேரம் நின்றுவிட்டுச் செல்கின்றன. கோவிலைச் சுற்றி விலங்குகள் ஒன்றை ஒன்று கொல்வதில்லை. ஒன்றுக்கொன்று சண்டையிடுவதும் இல்லை'' என்று இலங்கைவாசிகள் கூறுகிருர்கள். ○

---

# எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், பொன்மொழிகள், ஆன்மிக வினக்கள் (கவிதைகள் அனுப்ப வேண்டாம்) முதலிய எதையும் தபால்மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருககவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும், கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ்நடையில் தெளிவாக எழுத வேணடும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெருத அன்பர்கள் போதிய தபால்தலைகளை அனுப்பி வைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிருேம்.

ஆசிரியர்,
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

# 'தத்த்வமஸி'—மகாவாக்கியத்தின் விளக்கம்

## ஆதிசங்கரரின் வாக்யவ்ருத்தி

வி. ஆர். கணேசன்

'த்வம்—நீ' என்ற பதத்தின் பொருளை அறிந்தபின் 'தத்—அது' என்ற பதத்தின் பொருளை ஆராய்வோம் என்று குரு கூறுகிறார்.

இந்த ஆராய்ச்சி இரண்டு விதமாகச் செய்யப் படும். ஒன்று—உபநிஷதங்களில் கூறிய நேர் முக அனுபவங்களால் சுட்டிக் காட்டப்படும். மற்றொன்று—ஒவ்வொன்ருக 'இது அல்ல, இது அல்ல' என்று புலன்களாலும் மனோ புத்தியாலும் அறியப்படும் பொருள்களைத் தவிர்த்துவிட்டு, 'இதற்கும் அப்பாற்பட்டது' என்று அறிகுறி மார்க்கமாகக் காட்டப்படுவது.

''எதைக்காட்டிலும் மேலான இன்பம் கிடையாது என்றும், எது நித்ய மெய்யுணர்வு மயமானது என்றும், காலத்தைக் கடந்ததனுல் என்றும் நிலைத்தது என்றும், பரிபூரணமாதலால் எங்கும் நிறைந்தது என்றும், எந்தப் பரம் பொருளைப்பற்றிச் சாத்திரங்களில் சொல்லப்படு கிறதோ அதுதான் 'தத்—அது' என்பதைக் குறிக்கிறது. மற்றும், வேதங்களில் எதை எல்லாமறிந்தது என்றும், எல்லாம் வல்ல பரம் பொருள் என்றும், எல்லாவற்றிற்கும் ஈச்வரன் என்றும் உறுதி கூறப்படுகிறதோ அந்தப் பரப் பிரம்மம்தான் 'அது' என்று அறிந்துகொள்.

[மாயையுடன் இணைத்துக்கொண்டு பரம் பொருள் கார்யப் பிரம்மமாக ஜகத் ஸ்ருஷ்டிக்கும், அதன் ரக்ஷணத்திற்கும், அழிவுக்கும் காரணமான ஸர்வேச்வரனுக அறியப்படுகிறது.]

''மேலும், எதை அறிவதனுல் எல்லாம் அறிந்தது போலாகும் என்று சாஸ்திரங்களில், மண்ணுலாகிய குடம் முதலிய உதாரணங்களால் சுட்டிக் காட்டப்படுகிறதோ, அந்த உபாதான காரணம்தான் (Material Cause) பரப்பிரம்மம் என்று அறிந்துகொள். மண்ணுலாகிய குடம் பல உருவமும் பெயரும் கொண்டு பலவிதமாக அறியப்பட்டபோதிலும் அவற்றிற்கெல்லாம் மண்தான் ஆதாரம் என்பது தெளிவாகியிருப்பது போல, நித்யம் நிலைத்துள்ள எல்லாவற்றிற்கும் உபாதான காரணமான பரப்பிரம்மம்தான் 'அது' என்று அறிந்துகொள். தேசம் காலம் வஸ்து என்னும் எல்லைகளில் கட்டுப்படாத நிலையை நிருபிப்பதற்காக ஈச்வரன் காரணம் என்றும், ஜகத் கார்யம் என்றும் சாஸ்திரங்களில் உணரப்படுகிறதோ, அந்தப் பிரம்மம்தான் 'அது' என்றும் அறிந்துகொள்.

''மோக்ஷத்தை விரும்பும் சாதகன் விடா முயற்சியுடன் ஆத்மவிசாரத்தில் ஈடுபட்டுத் தியானம் செய்து எந்தப் பரமாத்மாவை அறிய வேண்டும் என்று வேதாந்தத்தில் கூறியுள்ளதோ அந்தப் பிரம்மம்தான் 'அது' என்று அறிந்து கொள்.



''சாஸ்திரங்களில் ஜகத் சிருஷ்டியைப்பற்றிக் கூறும்பொழுது, பரம்பொருள் உலகத்தைச் சிருஷ்டி செய்து, அதிலுள்ள ஜீவப் பொருள் களுக்குள்ளே பிரவேசித்து, ஜீவாத்மாவாக எல்லா வற்றையும் இயலச்செய்து, அவற்றை இயக்குவ தாகவும் இருந்துகொண்டிருக்கிறது என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள தனிப் பட்ட ஜீவன்களைத் தமது தமது கர்மங்களில் ஈடுபடச் செய்வதும், அவற்றுக்கு 'நான்தான் கர்த்தா' என்ற உணர்ச்சியை உண்டுபண்ணுவ தும், வெவ்வேறு கர்மபலன்களைக் கொடுப்பதும் மாயையுடன் கூடி விளையாடும் அந்தப் பரம்

பொருளின் செயல்தான் என்றும் உபநிஷதங்களில் கூறப்பட்டிருக்கிறது. அந்தப் பரம் பொருள்தான் 'தத் (அது)' என்று உணர்ந்து கொள்வாய்.''

இதுவரை, 'த்வம்—நீ, தத்—அது' என்ற பதங்களின் பொருள் தனித் தனியாகப் பார்க்கப் பட்டது. இப்பொழுது இவ்விரண்டும் சேர்ந்த வாக்கியத்தின் பொருளைக் கவனிப்போம். மகா வாக்கியத்தில் இந்த இரண்டு பதங்களும் ஒன்றையே குறிக்கின்றன என்றல்லவா கூறப் பட்டிருக்கிறது? இந்த வாக்கியத்தின் அர்த்தம் வார்த்தைகளின் கிரமத்தால் வெளிப்பட்ட அர்த்தத்தாலோ, அவற்றின் கோவையால் மட்டுமோ அறிந்து கொள்வது சரியாகாது. இந்த வாக்கியம் ஒரே ஆனந்த ரஸமாகிய பிரிவற்ற பரப்பிரம்மத்தைக் குறிக்கிறது என்பது பண்டிதர்களின் அபிப்பிராயம்.

நம்முள் இருக்கும் ஜீவாத்மா ஸாக்ஷிரூபமான தூய உணர்வாகப் பிரகாசிக்கும்பொழுது நிகரற்ற ஆனந்தத்தை அறிகிறது. தேகத்துடன் சேர்க்கையாலாகிய உபாதியைக் கடந்தால் நித்ய ஆனந்தமயமான உணர்வு அறியப்படுகிறது. அதாவது, அவித்யையால் கட்டுண்ட ஜீவாத்மா, நித்திரை நிலையில் ஸாக்ஷிரூபமாக ஆனந்தத்தை அறிவது போல், அவித்யையைத் தவிர்த்தவுடன் இரண்டற்ற நித்ய ஆனந்தமயமான பரமாத் மாவாகவே திகழ்கிறது. இவ்வாறு ஜீவன்களின் உள்ளிருக்கும் உபாதி கடந்த ஆத்மாவும் மாயையைக் கடந்த பரமாத்மாவும் ஒன்றேதான் என்பதை நிருபிக்கிறது. இந்தத் 'த்வம்—நீ' என்ற பதத்திற்கும், 'தத்—அது' என்ற பதத் திற்கும் உள்ள ஐக்கியத்தை இவ்வாறு அறிவ தனால், 'நான் பிரம்மமல்ல' என்ற உணர்ச்சி அகன்றுவிடும். உண்மையறிவு அடைந்தவுடன் ஐக்கியத்தை உணர்ந்து, 'பிரம்மமாகிய சச்சி தானந்த ரூபமே நான், நானே அந்தப் பிரம்மம்' என்ற உணர்வு உண்டாகும்.

இவ்வாறு 'தத்த்வமஸி—நீ அதுவாக இருக் கிறாய்' என்பது போன்ற மகாவாக்கியத்தின் பொருள் 'த்வம்—நீ', 'தத்—அது' என்னும் பதங்களின் உட்கருத்தை அறிவதன் மூலம் இவற்றின் ஐக்கியத்தைத் தெளிவாக்குகிறது.

> ஞானிக்கும் துஷ்டர்களுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவருமே துன்பம் தருபவர்கள். ஆனால் ஒரு வித்தியாசம் : ஞானி களின் பிரிவு பெருந்துன்பம்; துஷ்டர்களின் உறவு பெருந்துன்பம்.
>
> —துளசிதாசர்

மகாவாக்கியத்தின் இரண்டு பதங்களுக்கும் வெளிப்பட்ட பொருளைப் பார்க்கும்பொழுது—

**த்வம்—நீ** என்பது எல்லா ஜீவராசிகளிலும் நேராக அறியப்பட்டதும், அவித்யா உபாதியால் வரையறுக்கப்பட்டுக் குறைபாடுள்ள ஜீவாத் மாவைக் குறிக்கிறது.

**'தத்—அது'** என்னும் பதம் எல்லாவற்றிலும் பரவியுள்ளதும், எல்லாவற்றிற்கும் ஆதாரமான தும், ஆனால் புலன்களால் நேராக அறியப்படாத துமான ஸர்வேச்வரனைக் குறிக்கிறது. இப்படி ஒன்றுக்கொன்று வேறுபட்ட பொருள்களைக் குறிப்பதனால் இந்தப் பதங்களின் உட்கருத்தை ஆராய்வதற்கு அவசியம் ஏற்படுகிறது. ஓர் உதாரணத்தால் இதை விளக்குவோம்.

'அதுதான் இவன்' என்ற வாக்கியத்தைக் கூறி, குழந்தைப் பிராயத்தில் பார்த்த ஓர் இளைஞனை இப்பொழுது அறிமுகப்படுவதாக வைத்துக்கொள்வோம். 'அது' என்பது நாம் அன்று பார்த்த குழந்தையைக் குறிக்கிறது. 'இவன்' என்பது நாம் இப்பொழுது பார்க்கும் நன்றாக வளர்ந்த இளைஞனைக் குறிக்கிறது. இந்த வாக்கியத்தின் பொருளை அறிந்து கொள்ளும்பொழுது சென்ற காலத்தையும், குழந்தையின் வண்ணத்தையும் உருவத்தையும் தவிர்த்து, அதே குழந்தை இப்பொழுது இளைஞன் ரூபத்தில் இருந்தபோதிலும், உருவத்தை மட்டும் பாராமல் அன்று பார்த்த குழந்தையும் இன்று பார்க்கும் அந்த இளைஞனும் ஒன்றேதான் என்ற உணர்ச்சி மட்டும்தான் முதலில் மனதில் பதிகிறது.

அதே மாதிரி வெளிப்பட்ட அர்த்தத்தின் ஒரு பாகத்தை மட்டும் தவிர்த்து, மற்றொரு பாகத்தை எடுத்துக்கொண்டு மகாவாக்கியத்தின் பதங்களை

ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, 'இவ்விரண்டு பதங்களும் ஒன்றையே குறிக்கிறது—அதுதான் நித்ய மெய்யுணர்வாகிய ஆனந்தம்' என்ற அறிவு உண்டாகிறது. அதாவது, 'த்வம்—நீ' என்ற அவித்யா உபாதியைத் தவிர்த்த ஜீவாத்மாவும், 'தத்—அது' என்ற மாயையுடன் இணைந்து சிருஷ்டி ஸ்திதி விலய காரியங்களில் ஈடுபட்டிருக்கும் ஈச்வரனும் ஒரே பரப்பிரம்மம் தான் என்று உணர முடிகிறது.

வேதாந்தத்தின் லட்சியம், 'நான் பிரம்மமாகவே இருக்கிறேன்—அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற நேர்முக அனுபவம் உண்டாகுதலேயாகும். இந்த உணர்வு உண்டாகி நீடித்து இருக்க வேண்டுமானால், ச்ருதிகளைக் குருமுகமாக ச்ரவணம் செய்து, மனன, நிதித்யாஸனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். கூடவே சம-தமாதி இந்திரியக் கட்டுப்பாடுகளையும் அந்தக்கரண சுத்திக்கு ஹேதுவான உபாஸனைகளை அனுசரித்தும், பலனை எதிர்பாராத கர்மங்களைச் செய்து கொண்டும், இஷ்டதேவதையிடம் அனன்யபக்தி செலுத்தி அதன் அருளையும் பெற வேண்டும்.

இவ்வாறு ஸம்ஸார வாஸனைகளாகிய அவித்யையை முற்றும் கடந்தவனாகி, ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களுடன் சேர்க்கையைத் தவிர்த்தவனாய், சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தம் என்னும் ஐந்து வித உணர்ச்சிகளால் பாதிக்கப்படாதவனாய், கர்மங்களின் பந்தத்தினின்றும் விடுபட்டவனாய், சாதகன் ஜீவன்முக்தனாகிறான். இத்தகைய ஞானி பிராரப்த கர்மங்களாலாகிய பலன்களைப் போக்குவதற்குச் சிறிது காலம் வரை சரீரத்தை வைத்துக்கொண்டு 'நானே பிரம்மம்' என்ற உணர்வுடன், மறுபிறப்பு இல்லாததும், அளவற்றதும், இணையில்லதுமான கைவல்யமாகிய ஆனந்தத்தை அடைகிறான். ○

## ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

### 1982 செப்டம்பர் & அக்டோபர் மாத நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| **ஸ்ரீ ஸ்ரீ துர்க்கா பூஜை** | 23-9-82 வியாழன் ஸ்ரீ துர்க்கா சஷ்டி |
| 24-9-82 வெள்ளி | மகாசப்தமி (மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ லலிதா சகஸ்ரநாம அர்ச்சனை) |
| 25-9-82 சனி | மகா அஷ்டமி |
| 26-9-82 ஞாயிறு | மகா நவமி |
| 27-9-82 திங்கள் | விஜயதசமி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு சாந்திஜலம்) |
| **ஸ்ரீ லக்ஷ்மி பூஜை** | 2-10-82 சனிக்கிழமை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு) |
| **ஸ்ரீ காளி பூஜை** | 16-10-82 சனிக்கிழமை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு) |
| 12-9-82 ஞாயிறு | சுவாமி அபேதானந்த ஜயந்தி |
| 17-9-82 வெள்ளி | சுவாமி அகண்டானந்த ஜயந்தி |
| 29-10-82 வெள்ளி | சுவாமி சுபோதானந்த ஜயந்தி |
| 31-10-82 ஞாயிறு | சுவாமி விஞ்ஞானானந்த ஜயந்தி |

செப்டம்பர் 13, 28 & அக்டோபர் 13, 28 தேதிகளில் ஏகாதசி—மாலை வழிபாட்டிற்குப் பிறகு ராமநாம சங்கீர்த்தனம்.

ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை மணி 4-30 மணிக்குத் தமிழில் சொற்பொழிவு உண்டு. எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாலை 5-30 மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் சுவாமி ராகவேசானந்தர் உரை நிகழ்த்துவார்.

செப்டம்பர் 4 & அக்டோபர் 2 ஆகிய சனிக்கிழமைகளில் 'அத்யாத்ம ராமாயணம்' என்ற தலைப்பில் மாலை 5-30 மணிக்கு P. ராமகிருஷ்ணன் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)**

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம்—சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — தேவி மாஹாத்மியம்—சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் — ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் — பகவத் கீதை—பிரம்மசாரி சின்மயசைதன்யா
5. வெள்ளி — துளசிராமாயணம்—சுவாமி வீதபயானந்தர்

# முன்னேறிச் செல்லுங்கள்

**சுவாமி விவேகானந்தர்**

இந்திய இளைஞர்களை ஒன்றுதிரட்டிச் செயலில் ஈடுபடச் செய்வதற்காகவே நான் பிறந்திருக்கிறேன். அது மட்டுமல்ல, ஒவ்வொரு நகரத்திலும் நூற்றுக்கணக்கான பேர் என்னுடன் சேர்ந்துகொள்ளத் தயாராக இருக்கிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தவே முடியாத அலைகளைப் போலப் புரட்டி அடித்துக்கொண்டு போகும் வகையில் இந்தியா முழுவதும் அனுப்பி வைக்க விரும்புகிறேன். அவர்கள் மிகவும் தாழ்ந்தவர்களாகவும் சமுதாயத்தால் நசுக்கப்பட்டவர்களாகவும் உள்ளவர் வீட்டு வாயிலுக்கே சென்று, வசதி, ஒழுக்கம், மதம், கல்வி ஆகியவற்றைக் கொண்டு சேர்ப்பார்கள். இதை நான் சாதித்தே தீருவேன்! அல்லது செத்து மடிவேன்!

மகிமை வாய்ந்தவர்களே! விழித்துக்கொள்ளுங்கள், விழித்தெழுங்கள். இந்த உலகம் துன்பம் என்ற தீயில் எரிந்து பொசுங்கிக்கொண்டிருக்கிறது. இந்த நிலையில் நீங்கள் இப்போது உறங்கிக்கொண்டிருக்கலாமா? நம்முள் குடிகொண்டிருக்கும் தெய்வங்கள் விழித்தெழும் வரையிலும், நம்முள் உறங்கிக்கொண்டிருக்கும் தெய்வங்கள் விழித்தெழுந்து நம் பிரார்த்தனைக்குச் செவிசாய்க்கும் வரையிலும், நாம் அனைவரும் மீண்டும் மீண்டும் அந்தத் தெய்வங்களைக் கூவி அழைத்தபடியே இருப்போமாக! இதைவிட வாழ்க்கையில் வேறு என்ன பெரிய காரியம் இருக்கிறது?

மோகமாகிய முதலையின் வாயில் மக்கள் எப்படிப் பரிதாபமாகச் சிக்கிக்கொண்டிருக்கின்றனர் என்பதைப் பார்! அந்தோ! இதயத்தைப் பிளக்கக்கூடிய அவர்களின் சோகக் குரலைக் கேளுங்கள். முன்னேறிச் செல்லுங்கள்! கட்டுண்டு கிடக்கும் மக்களைப் பந்தபாசங்களிலிருந்து விடுவிப்பதற்காகவும், எளியவர்களின் துன்பச் சுமையைக் குறைப்பதற்காகவும், அறியாமையில் மூழ்கியிருக்கும் இருண்ட கிணறு போன்ற உள்ளங்களை ஒளிபெறச் செய்வதற்காகவும், வீரர்களே! முன்னேறிச் செல்லுங்கள்!

இதயமே இல்லாமல், அறிவாற்றலைப் பயன்படுத்தி, பயனற்ற விஷயங்களைப் பத்திரிகைகளில் எழுதிக்கொண்டிருக்கும் எழுத்தாளர்களையும் அவர்களது எழுத்துக்களையும் நீங்கள் அறவே பொருட்படுத்தாதீர்கள்.

சகோதரர்களே! நாம் ஏழைகள்; திக்கற்றவர்கள். ஆனால் இந்த உலகில் பரமாத்மாவின் கருவிகளாக அமைந்தவர்கள் எல்லோரும் நம் போன்ற ஏழைகளாகவே இருந்திருக்கிறார்கள். இந்த உலகில் மகத்தான எல்லாக் காரியங்களையும் ஏழைகள்தாம் செய்து சாதித்திருக்கிறார்கள்.

பணம் படைத்தவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் இருக்கிறார்களே, அவர்களிடம் நம்பிக்கை வைக்க வேண்டாம். வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள் என்பதைவிட, செத்துப் போனவர்களாகவே அவர்கள் இருக்கிறார்கள். பணிவும் தாழ்மையும் கொண்டு, அதே சமயத்தில் நம்பிக்கைக்கு உரியவர்களுமாகிய உங்களிடம் தான் நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன்.



பெருஞ்செயல்களைச் செய்து முடிப்பதில் எப்போதும் முன்னேறிச் செல்லுங்கள்! ஏழைகளிடமும் சமுதாயத்தில் நசுக்கப்பட்டவர்களிடமும் இரக்கம் காட்டுவது—நமக்கு மரணமே நேர்ந்தாலும்கூட அவர்களுக்கு இரக்கம் காட்டுவது—இதுவே நமது இலட்சியமாகும். தைரியம் வாய்ந்த இளைஞர்களே! முன்னேறிச் செல்லுங்கள்.

கடவுளிடம் நம்பிக்கை வையுங்கள். திட்டம் எதுவும் தேவையில்லை. அதனால் ஆகப்போவதும்

ஒன்றுமில்லை. துன்பத்தால் வாடுகிறவர்களுக்காக இரக்கம் கொள்ளுங்கள். பிறகு உதவிக்காகக் கடவுளை நோக்குங்கள். உங்களுக்குத் தேவைப்படும் உதவி நிச்சயமாக வந்தே தீரும்.

இளைஞர்களே! ஏழைகள், அறியாமை மிக்கவர்கள், நசுக்கப்பட்டவர்கள் ஆகியோருடைய நலனுக்காகப் போராடும் என்னுடைய இரக்கத்தையும் முயற்சியையும் உங்களிடம் நான் ஒப்படைக்கிறேன். நாள்தோறும் கீழ்நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் இந்த முப்பது கோடி மக்களின் நல்வாழ்வை மீட்டுத் தருவதற்காக உங்கள் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணிப்பதாகச் சபதம் மேற்கொள்ளுங்கள்.

நீங்கள் உண்மையிலேயே என் குழந்தைகளானால், எதற்குமே அஞ்சி ஸ்தம்பித்து நின்றுவிட மாட்டீர்கள். நீங்கள் சிங்க ஏறுகளைப் போலத் திகழ்வீர்கள். இந்தியாவையும், இந்த உலகம் முழுவதையுமே நாம் தட்டியெழுப்பியாக வேண்டும். தங்களுடைய பணியைச் செய்து முடிப்பதற்காகத் தீயில் குதிப்பதற்கும் என் குழந்தைகள் தயாராக இருக்க வேண்டும்.

கிராமம் கிராமமாகச் சென்று மனித குலத்திற்கும் பரந்த இந்த உலகத்திற்கும் நன்மை செய். மற்றவர்களுக்கு முக்தியை வாங்கிக் கொடுப்பதற்காக நீ நரகத்திற்கும் செல்ல வேண்டும். மரணம் வருவது இவ்வளவு உறுதியாக இருக்கும்போது நல்ல ஒரு காரியத்திற்காக உயிரை விடுவது மேல்.

என் மகனே! மரணம் நேருவதைத் தடுப்பதற்கில்லை என்றால் கற்களைப் போலவும் கட்டைகளைப் போலவும் செத்து மடிவதைவிட வீரர்களைப் போல இறப்பது மேலானதல்லவா? நிலையில்லாத இந்த உலகிலே இரண்டொரு நாள் அதிகமாகவே வாழ்ந்துவிடுவதனால் பெறப்போகிற பயன்தான் என்ன? வாழ்க்கை என்னும் கத்தி துருப்பிடித்து அழிந்து போவதைவிட, தேய்ந்து அழிவதே மேலானது. அதிலும் குறிப்பாக, மற்றவர்களுக்குச் சிறிதளவிற்கு ஒரு நன்மை செய்வதற்காக அழிந்துபோவது மிகவும் நல்லது.

வேலை செய்யத் தொடங்கு; மகத்தான சக்தி உனக்குள் தானே வருவதைக் காண்பாய். 'என்னால் இவ்வளவு சக்தியைத் தாங்க இயலாது' என்று நீ நினைக்குமளவுக்கு ஏராளமான சக்தி உன்னை வந்தடையும். மற்றவர்களுக்காக நாம் மேற்கொள்ளும் மிகக் குறைந்த அளவு உழைப்பும் நமக்குள்ளே இருக்கும் சக்தியைத் தட்டி எழுப்புகிறது. மற்றவர்களுடைய நன்மையைக் குறித்துச் சிறிதளவு நினைப்பதுங்கூடச் சிங்கத்திற்குச் சமமான ஆற்றலை நமது இதயத்திற்குப் படிப்படியாகத் தருகிறது. நான் உங்களை எல்லாம் உயிருக்கு உயிராக மிகவும் நேசிக்கிறேன். என்றாலும், நீங்கள் அனைவரும் பிறருக்காக உழைத்து உழைத்து அந்தப் பணியில் இறந்துபோவதையே நான் விரும்புகிறேன்.

எந்த விதமான சுயநல நோக்கமும் இல்லாமல், பணம் புகழ் மற்றும் வேறு எதிலும் கவனம் செலுத்தாமல், 'நன்மை செய்ய வேண்டும்' என்பதற்காகவே தொண்டு செய்பவன்தான் சிறப்பாகப் பணியாற்றுகிறான். இத்தகைய மன நிலையில் ஒருவன் பணியாற்ற வல்லவனாகும்போது, அவன் ஒரு புத்த பகவான் ஆகிவிடுவான். உலகத்தையே மாற்றி அமைக்கக்கூடிய வகையில் வேலை செய்யும் சக்தி அத்தகையவனிடமிருந்து வெளிப்படுகிறது.

அன்பு, வெற்றி பெறுவது நிச்சயம். உங்களது சகோதரர்களாக விளங்கும் மக்களிடம் உங்களுக்கு அன்பு இருக்கிறதா? ஆண்டவனைத் தேடி நீங்கள் எங்கே போகிறீர்கள்? துன்பப்படுபவர்கள், பலவீனர்கள் இவர்கள் எல்லோரும் அத்தனை தெய்வ வடிவங்களே அல்லவா? ஏன் முதலில் நீங்கள் இவர்களை வழிபடக் கூடாது? கங்கைக் கரையில் கிணறு வெட்டுவதற்குப் போவது உண்டா? அன்பின் எல்லாம் வல்ல சக்தியில் நம்பிக்கை வையுங்கள்.

ஆண்டவனுக்கு உதவுவதற்காக என்று இல்லாமல் அவருக்காகப் பணியாற்றும் பேறு பெற்ற நாம் பாக்கியசாலிகள் ஆவோம். 'உதவி' என்ற சொல்லை உன் உள்ளத்திலிருந்தே விலக்கிவிடு. நீ உதவிசெய்ய முடியாது. அப்படி நீ நினைப்பதுதான் தெய்வ நிந்தனையாகும். எனவே நீ மக்களுக்குச் செய்யும் சேவையைக் கடவுள் வழிபாடாகவே செய்.

நம்முடைய ஆன்மிக நன்மைக்காகவே நாம் ஏழை எளியவர்களிடம் கடவுளைக் கண்டு வழிபட வேண்டும். தங்களுக்குத் தொண்டு செய்வதன்

மூலம் பகவானை நாம் வழிபடுவதற்கு நமக்கு வாய்ப்பு அளிப்பதற்காகவே ஏழை மக்களும் துன்பப்படுபவர்களும் தோன்றியிருக்கிறார்கள் போலும்! அவ்விதம் தொண்டு செய்யும் வாய்ப்பை நமக்குத் தருவதற்காகவே பகவானும் நோயாளி, பைத்தியக்காரன், குஷ்டரோகி, பாவி ஆகியோரின் வடிவங்களில் தோன்றுகிறார் போலும்!

நீ கடவுள் நம்பிக்கை உடையவனாக இருந்தாலும் சரி, அல்லது நாத்திகனாக இருந்தாலும் சரி; உன் சுகதுக்கங்களை மறந்து வேலை செய். இதுதான் நீ இப்போது கற்றுக்கொள்ள வேண்டிய முதற் பாடமாகும்.

உன் வாழ்வின் எல்லா இன்பங்களையும் பொது மக்களின் நன்மைக்காக நீ துறந்துவிட வல்லவனாகும்போது, நீ ஒரு புத்த பகவான் ஆகிவிடுவாய்.

பரஞ்சோதியாக விளங்கும் ஆண்டவனின் ஒளியை வேண்டி நாம் அனைவரும் பிரார்த்திப்போமாக. 'கருணைப் பரஞ்சுடர் நமக்கு வழி காட்டட்டும்' என்று நாம் பிரார்த்திப்போமாக. அப்போது, காரிருளிலே ஓர் அருள் ஒளி தோன்றும்; பகவான் நமது கையைப் பிடித்து வழிகாட்டி அழைத்துச் செல்வார்.

வறுமை, வைதிகக் கொடுமை, கொடுங்கோன்மை என்னும் இத்தகைய துன்பங்களால் நசுக்கப்பட்டு உயிர் வாழும் இந்தியாவின் இலட்சக்கணக்கான ஏழை மக்களுக்காக நாம் ஒவ்வொருவரும் இரவும் பகலும் பிரார்த்தனை செய்வோமாக. உயர் வகுப்பினர், பணக்காரர் ஆகியோரைவிட நான் இவர்களுக்கு மத உபதேசம் செய்வதில்தான் பெரிதும் அக்கறை கொண்டிருக்கிறேன்.

நான் தத்துவஞானி அல்ல; ஆத்மஞானியுமல்ல; நான் ஓர் ஏழை; ஏழைகளை நேசிக்கிறேன்; அவ்வளவுதான்.

வறுமையிலும் அறியாமையிலும் ஆழ்ந்திருக்கும் கோடிக்கணக்கான ஏழைமக்களுக்காக யார் அனுதாபம் கொள்கிறார்கள்? எவனுடைய இதயம் ஏழைகளுக்காக இரத்தம் வடிக்கிறதோ அவனையே நான் மகாத்மா என்று சொல்வேன். அந்த ஏழைகளுக்காக வருந்துபவர்கள் யார் இருக்கிறார்கள்?

இந்த ஏழைமக்களையே உங்கள் தெய்வமாகக் கொள்ளுங்கள். அவர்களைப் பற்றியே சிந்தனை செய்யுங்கள்; அவர்களுக்காகவே உழையுங்கள்; அவர்களுக்காகவே இடைவிடாமல் பிரார்த்தனை செய்யுங்கள். அப்போது ஆண்டவன் உங்களுக்கு வழிகாட்டுவார்.

ஏதேனும் ஒரு பெரிய காரியத்தை நிறைவேற்ற வேண்டுமானால் அதற்கு மூன்று விஷயங்கள் மிகவும் அவசியமானவை. முதன்முதலாக, இதயபூர்வமான உணர்ச்சி இருக்க வேண்டும். நீங்கள் உண்மையான உணர்ச்சி கொண்டிருக்கிறீர்களா? தேவர்கள், முனிவர்கள் இவர்களின் சந்ததிகளான கோடானுகோடி மக்கள் இன்று மிருகங்களிலிருந்து அதிக வேற்றுமை இல்லாமல் வாழ்கிறார்கள் என்பதை உணர்கிறீர்களா? மிருகங்களுக்குச் சமமாக அவர்கள் மிருகங்களின் சகோதரர் போன்ற நிலைக்கு வந்துவிட்டார்களே என்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கிறதா? இலட்சக் கணக்கான மக்கள் இன்றையதினம் உணவின்றிப் பட்டினி கிடக்கிறார்களே; இலட்சக் கணக்கான மக்கள் பல நூற்றாண்டுகளாக இந்தப் பட்டினியால் மடிந்து வருகிறார்களே என்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கிறதா? இந்த உணர்ச்சி உங்கள் மன அமைதியைக் குலைத்து உங்களுக்குத் தூக்கமில்லாமல் செய்துவிடுகிறதா? அது உங்கள் இரத்தத்தில் கலந்து, நரம்புக் குழாய்களில் ஓடி, உங்கள் இதயத்துடன் சேர்ந்து ஓயாமல் துடித்துக்கொண்டிருக்கிறதா? ஏறக்குறைய இந்த உணர்ச்சி உங்களை ஒரு பைத்தியமாகவே ஆக்கிவிட்டதா? நாட்டின் துக்கம், சீர்கேடு என்ற ஒரே கவலை உங்கள் மனம் முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டதா? இதனால் உங்கள் பெயர், புகழ், மனைவி, மக்கள், உடைமை இவை அனைத்தையும் மறந்துவிட்டீர்களா? உங்கள் உடலையுங்கூட நீங்கள் மறந்துவிட்டீர்களா? இந்த நிலைக்கு வந்துவிட்டீர்களானால் அதுவே தேசபக்தனாவதற்கு உரிய முதற்படியாகும். ○

# ஆன்மிக வினா-விடை!

**'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்'**

'கேள்வி–பதில்' பகுதி இந்த இதழிலிருந்து துவங்குகிறது. இடவசதியைப் பொறுத்து அவ்வப்போது வினா-விடைகள் இடம்பெறும். இந்தப் பகுதிக்கு ஏற்புடைய கேள்விகளை அன்பர்கள் எழுதி அனுப்பலாம்.

**கேள்வி : விநாயகர் கோயிலில் 'சிதறுதேங்காய்' உடைப்பதற்குக் காரணம் என்ன?**

பதில் : விநாயகர் பிரணவசொரூபி; ஞானத்தின் சின்னம். அவரை வணங்குவது ஞானத்தைப் பெறுவதற்காகும்.

மூன்று கண் உள்ள தேங்காய், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களால் கட்டுண்டு இருக்கும் ஆன்மாவை விளக்குகிறது. பக்தன் கோயிலுக்குச் சென்று விநாயகரை வணங்கி அவனது அருளையும் பிரசாதத்தையும் பெற்றுத் திரும்புகிறான். அவனிடம் உள்ள மும்மலங்களும் விடுதலைபெற்று ஞானமடைந்ததைக் காட்டவே அவன் வெளியே வந்ததும் விநாயகருக்கு விடலைக்காய் எறிகிறான்.

ஆன்மாவைத் தளைத்திருந்த மும்மலங்களையும் உடைத்தெறிந்து, தன்னலத்தை அறவே நீக்கி, ஆன்மாவை இறைவனுக்கு அர்ப்பித்து இறை பணியில் நிற்பேன் எனக் காட்டுவதே இதன் தத்துவமாகும்.

**கேள்வி : சுவாத்யாயம் என்றால் என்ன?**

பதில் : மனிதனைப் பந்தத்திலிருந்து விடுவிக்கவும் தெய்வநிலைக்கு உயர்த்தவும் வல்ல ஆற்றல் படைத்த ஆன்மிக நூல்களைச் சாஸ்திரங்கள் என்கிறோம்.

இவை அருளாளர்களான அனுபூதிமான்களால் அருளப்பெற்றவை. முக்திக்கு வழி காட்டக்கூடிய இத்தகைய சாஸ்திரங்களைப் படிப்பதும் ஆழ்ந்து ஆராய்வதும் சுவாத்யாயம் எனப்படுகிறது,

பாச (லௌகிகத்தை வளர்க்கும்) நூல்களைப் பயிலாமல், பதி (இறைவனை அடையச் செய்யும்) நூல்களைப் பயில்வதற்கே சுவாத்யாயம் என்ற சொல் பொருந்தும். இந்த வகையில் பார்த்தால் புற்றீசல்கள் போல் நாள்தோறும் தோன்றியும் மறைந்தும் வரும் வார, மாத, நாளிதழ்களைப் பயில்வது சுவாத்யாயம் அல்ல.

சாஸ்திரங்களை ஓதுவதையும், பிறருக்கு ஓதுவிப்பதையும் வாழ்நாள் முழுவதும் ஒருவன் செய்து வர வேண்டும் என்று வேதம் கட்டளையிடுகிறது. இந்த உண்மையை, 'ஸ்வாத்யாய ப்ரவசநாப்யாம் ந ப்ரமதிதவ்யம்' என்று தைத்திரீய உபநிஷதம் குறிப்பிடுகிறது.

மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற மட்டில் சாஸ்திரங்களைப் பயிலவும் வேண்டும்; அவற்றை மக்களிடையே ஒரு கர்ம யோகமாகக் கருதிப் பிரசாரம் செய்யவும் வேண்டும். பயில்வதும், பிறரைப் பயிற்றுவிப்பதும் ஒருவரது வாழ்கையில் இணைந்தே இடம் பெற வேண்டும்.

சுவாத்யாயத்திற்கு உகந்த நூல்கள் எந்த மொழியில் வேண்டுமானாலும் இருக்கலாம்.

சுவாத்யாயத்தின் மூலம் ஒருவன், ரிஷிகளை மகிழ்வித்து அவர்களின் ஆசிகளுக்கு உரியவன் ஆகிறான். அத்தகையவன் ரிஷிகடனைச் செலுத்தியவன் ஆவான்.

**கேள்வி : பைண்டு செய்யப்பெற்ற 1977-ஆம் ஆண்டு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் தொகுதியை அன்பர் ஒருவரிடமிருந்து வாங்கிப் படித்தேன். அதில் எல்லா இதழ்களின் அட்டையிலும் 'எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாது செல்மின்!' என்ற வாக்கியம் உள்ளது. அதற்குப் பொருள் விளங்கவில்லை. அந்த வாக்கியத்திற்கு உரிய விளக்கத்தைத் தெரிவிக்கக் கோருகிறேன்.**

பதில்: 'எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாது செல்மின்!' என்று சுவாமி விவேகானந்தர் தமது புகழ்வாய்ந்த ஒரு சொற்பொழிவிலே குறிப்பிட்டார்.

சுவாமிஜியின் இந்த மகா வாக்கியத்திற்கு மூலமாகக் கட உபநிஷதத்தில் ஒரு மந்திரம் உள்ளது. அதன் பொருள், ''எழுந்து கொள்ளுங்கள், விழித்துக் கொள்ளுங்கள், சிறந்த ஆசாரியர்களை அடைந்து ஞானத்தைப் பெறுங்கள்'' என்பதாகும்.

ஆத்ம சாட்சாத்காரத்தைப் பெறுவதற்காகவே அமைந்தது மனிதப் பிறவி. அஞ்ஞான இருளில் உழலும் மக்களை நோக்கி உபநிஷதம், ''பந்தங்களிலிருந்து எழுந்து வாருங்கள்; அறியாமை என்னும் தூக்கத்திலிருந்து விழித்துக்கொள்ளுங்கள். ஆன்மஞானத்தை அடைவதற்காக உங்களுக்கு வழிகாட்டக் கூடிய வல்லமை படைத்த அனுபூதிமான்களாகிய ஆசாரிய புருஷர்களை அதாவது குரு ஒருவரைச் சென்றடையுங்கள்'' என்று அறிவுரை தருகிறது.

ஆன்மிக விழிப்பிற்குக் கடோபநிஷதம் சொல்லும் இந்தக் கருத்தை, சுவாமி விவேகானந்தர் தமது சொற்பொழிவுக்கேற்ப, அந்தச் சமயத்தில் 'எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!' என்று குறிப்பிட்டார்.

நம்மில் பலர் சோர்ந்துபோய்ச் செயலற்று சும்மா அமர்ந்திருக்கிறோம். சுவாமிஜி நம்மை வீறுகொண்டெழுந்து செயற்படும்படி தூண்டுகிறார்.

நம்மில் பலர் உறக்க நிலையில் இருக்கிறோம். சுவாமிஜி நம்மை விழித்தெழும்படி அறைகூவல் விடுக்கிறார். விழித்து, வாழ்ந்து, முன்னேற வேண்டும் என்று அழைக்கிறார்.

வாழ்க்கை என்பது மிகப் பெரிய ஒரு பிரயாணம். பிரயாண இலட்சியம் ஒன்று இருக்கிறது. அதை நோக்கி முன்னேறிச் செல்வதே உண்மையான வாழ்க்கையாகும். வழியில் நாம் தாமதித்துத் தங்கி நின்றுவிடக் கூடாது. முடிவான இடத்தை அடையும் வரையிலும் நில்லாமல் நடந்து சென்றுகொண்டே இருக்க வேண்டும். அவ்விதம் செல்வோமானால் ஒரு நாள் நமது இலட்சியம் நிறைவேறுவது திண்ணம்.

ஆன்மிக விழிப்பிற்குச் சொல்லப்பட்ட கடோபநிஷதத்தின் இந்தக் கருத்தை, ஆன்மிக விழிப்பிற்கு உட்பட்ட சமுதாயத்தின் எல்லா விதமான எழுச்சிகளுக்கும் பொருந்தும் வகையில் சுவாமி விவேகானந்தர் பயன்படுத்தினார்.

கடவுளை அடைய விரும்புகிறவர்களுக்குக் கடவுள் சாட்சாத்காரம் இலட்சியம் ஆகிறது. விஞ்ஞானி ஒருவனுக்கு விஞ்ஞானக் கண்டு பிடிப்பே இலட்சியம் ஆகிறது. கல்வி பயிலும் மாணவனுக்குத் தேர்வில் வெற்றி பெறுவதே இலட்சியம் ஆகிறது. அடிமை நாட்டிற்குச் சுதந்திரம் அடைவதே இலட்சியம் ஆகிறது.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஓர் இலட்சியம் இருந்தாக வேண்டும். அதைப் போலவே ஒவ்வொரு நாட்டிற்கும் ஓர் இலட்சியம் இருக்கும், இருந்தாக வேண்டும்.

ஒவ்வொருவரும் உயர்ந்த ஓர் இலட்சியத்தைக் கண்முன்னால் வைத்துக்கொண்டு, அதை அடைய மேற்கொள்ளும் முயற்சிகளில் ஊக்கத்துடன் ஈடுபடுவதற்காக, இப்போது உள்ள நிலையிலிருந்தும், சோம்பலிலிருந்தும் எழுந்துகொள்ள வேண்டும். இலட்சியத்தில் சிரத்தை இல்லாமல் உறங்கிக்கொண்டிருப்பதை விட்டு விழிப்பாக இருக்க வேண்டும். அதாவது இலட்சியத்தை எப்போதும் கவனத்தில் கொண்டிருக்க வேண்டும். அதோடு மட்டுமில்லாமல் அந்த இலட்சியத்தை (குறிசாரும் வரை) அடையும் வரையிலும் நின்று விடாமல் ஓயாமல் ஒழியாமல் தொடர்ந்து சென்று கொண்டே இருக்க வேண்டும். அந்த இலட்சியத்தைச் சென்று அடைந்திட வேண்டும். இலட்சியத்தை அடையும் வாழ்க்கை, பயனுடைய வாழ்வாகிறது. அப்படிப்பட்ட மனிதன் பெற்ற பிறவி வீணாகவில்லை.

கேள்வி: லட்சியவாதம் என்றால் என்ன?

பதில்: ஒரு பொருளைப் பார்க்கும்போது அதை அந்தப் பொருளாகவே கருதாமல் அந்தப் பொருளுக்குப் பின்னணியிலுள்ள தத்துவத்தைப் பார்ப்பது லட்சியவாதம் எனப்படுகிறது. இதே கருத்தைப் பௌத்தர்கள் விஞ்ஞான வாதம் என்கிறார்கள்.

# கடவுளோடு வாழ்ந்தவர்

[சுவாமி பிரேமானந்தரின் வரலாறு.]

ஒரு சமயம் பாபுராம் மகராஜ் எனப்பட்ட சுவாமி பிரேமானந்தரும், காளிகிருஷ்ணரும் அன்னை ஸ்ரீசாரதா தேவியைத் தரிசிப்பதற்கு ஜயராம்பாடி சென்றனர். அங்கே சுமார் பதினைந்து தினங்கள் தங்கியிருந்தனர்.

ஒரு நாள் உலாவச் சென்றிருந்தபோது கிராமக் குளத்தில் தாமரைமலர்கள் மலர்ந்திருந்தன. அன்றலர்ந்த தாமரைமலர்களைக் கண்டதும் அவற்றைப் பறித்து ஸ்ரீஅன்னையின் திருவடியில் சமர்ப்பிக்க வேண்டும் என்ற ஆவல் சுவாமி பிரேமானந்தருக்கு ஏற்பட்டது. உடனே அவற்றைப் பறிக்க நீரில் இறங்கினார்.

மலர்களைப் பறித்துக்கொண்டு கரையை அடைந்ததும் அவர் உடம்பில் சுமார் இருபது முப்பது அட்டைகள் ஒட்டிக்கொண்டிருந்தன. இதைக் கண்ட காளிகிருஷ்ணரும் பிரேமானந்தரும் மிகவும் சிரமப்பட்டு அவற்றை அப்புறப் படுத்தினர். இதனால் உடல் முழுவதும் இரத்த மயமாக ஆகிவிட்டது. இதைக் கண்ட அன்னை ஸ்ரீசாரதாதேவியார் மிகவும் சங்கடப்பட்டார். மீண்டும் இவ்விதம் நிகழாதவாறு கவனமாக இருக்கும்படி கேட்டுக்கொண்டார்.

மடத்துத் துறவிகள் அனைவரும் ஒருவர்மீது ஒருவர் ஆழ்ந்த நிலையான அன்பு கொண்டிருந் தனர். இந்த அன்புதான் ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தை நல்ல முறையில் நடத்தவும், அதன் விதிமுறைகளைக் கடைப்பிடிக்கவும் அடிப்படைக் காரணமாக இருந்தது.

'மடத்தில் விடியற்காலம் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் படுக்கையை விட்டு அனைவரும் எழுந் திருக்க வேண்டும். அவ்விதம் யாராவது எழுந்திருக்காமற் போனால் அவர்கள் அன்று பிட்சான்னம் கொண்டே உணவருந்த வேண்டும்' என்ற ஒரு விதியை சுவாமி விவேகானந்தர் ஏற்படுத்தியிருந்தார்.

ஒரு நாள் பிரேமானந்தர் காலையில் எழுந் திருப்பதற்குத் தாமதம் ஆகிவிட்டது. ''அவன் காதருகே மணியை அடி'' என்று சுவாமி விவேகானந்தர் கட்டளையிட்டார். மணியோசை கேட்டுப் பிரேமானந்தர் எழுந்திருந்தார். தாம் செய்த தவற்றை உணர்ந்து கொண்டார். அதற்கேற்ற தண்டனையைப் பெற்றுக்கொள்வ தற்காக சுவாமிஜியிடம் சென்று, ''நீ கட்டளை யிட்டிருக்கிறாய். நானோ அதை மீறிவிட்டேன். அதற்கு உரிய தண்டனை உண்டல்லவா? அது என்ன தண்டனை என்று சொல்லு'' என்றார். அதைக் கேட்டவுடனே சுவாமி விவேகானந்தர் மிகவும் உருக்கமாக, ''உனக்கு நான் தண்டனை தருவேன் என்று எண்ணிக்கூடப் பார்க்க முடிந்ததா உன்னால், பாபுராம்?'' என்று கேட்டார்.



சுவாமி விவேகானந்தர் கண்களில் நீர் ததும்பி மேலே பேசவிடாமல் தடுத்துவிட்டது. பாபு ராமின் நிலைமையும் அவ்வாறே ஆகிவிட்டது.

இருவரும் வருந்திய நேரத்தில் சுவாமி பிரம மானந்தர் குறுக்கிட்டு, ''தண்டனை என்கிற பேச்சே இங்கே எழுவதற்கில்லை. ஆனாலும் பிட்சை எடுத்து வர வேண்டும் என்று நமக்குள் ஒரு விதி ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம் அல்லவா?'' என்றார். உடனே பாபுராம் பிட்சைக்காக வெளியே சென்றுவிட்டார்.

இவ்வாறு அவர்களுக்குள் இருந்த அன்பும், அதே சமயத்தில் எக்காரணத்தினாலும் விதிமுறை

களிலிருந்து நழுவாமல் இருக்கும் வைராக்கிய மும் அனைவரிடமும் காணப்பட்டன.

கல்கத்தாவில் உயர்குலத்தைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் தீயவர்களின் சேர்க்கையால் கஞ்சா முதலிய போதைப் பொருள்களை உட்கொள்ளப் பழகிக்கொண்டுவிட்டான். அவன் குடும்பத்தவர் அனைவரும் இதைக் கண்டு திகைத்து நின்றனர்.

என்ன முயற்சி செய்தும் யாராலும் அந்த இளைஞனை நல்ல வழிக்குக் கொண்டுவர முடிய வில்லை. அவனுடைய நண்பன் ஒருவனை, சுவாமி பிரேமானந்தர் அறிந்திருந்தது அவன் பாக்கியமே ஆகும். பேச்சுக்கிடையில் அந்த நண்பன் சுவாமி பிரேமானந்தரிடம் எல்லா விவரங்களையும் கூறி அவருடைய உதவியை நாடினன்.

அன்பே வடிவான சுவாமி பிரேமானந்தர் எல்லாவற்றையும் கேட்டு, அந்த இளைஞனைச் சந்திக்க அவனது இல்லத்திற்குச் சென்றார். பல விஷயங்களைப்பற்றிப் பேசி அவனுடன் நட்புக் கொண்டார். பின்பு ஒரு நாள் மடத்திற்கு வர அழைத்தார்.

அவரது அன்பினால் கவரப்பட்ட அந்த இளைஞன் ஒரு நாள் மடத்திற்கு வந்து நாள் முழுவதும் சுவாமி பிரேமானந்தருடனேயே கழித் தான். சுவாமி பிரேமானந்தரின் நடத்தையில் ஏதோ தெய்விகம் இருப்பதை உணர்ந்தான்.

எல்லோரும் அவனைத் திட்டுவார்கள். அவனைக் கண்டு வெறுப்பார்கள். அதுமட்டுமல்ல, அவன் முன்னிலையில் நிற்கவும் விரும்ப மாட்டார்கள். ஆனால் எல்லாவற்றையும் துறந்துவிட்ட சுவாமி பிரேமானந்தரோ, வெறுப்புணர்ச்சியைச் சிறி தளவும் காட்டாமல், எதையும் துறந்துவிடும்படி அறிவுரை கூறாமல், தனிப்பட்டதொரு உயர்ந்த நிலையிலுள்ள இலட்சியத்தைத் தன் முன்னே பிரகாசிக்கச் செய்வதை அந்த இளைஞன் கண்டான். கலவரப்பட்டிருந்த அவனுக்கு அவ ரிடம் கிடைத்ததோ அன்பான ஆதரவு. ஒரு பக்கம் மிகவும் கட்டுப்பாடான வாழ்க்கை. மற்றொரு பக்கம் தன்னலமற்ற அன்புப் பெருக்கு. இந்த அன்போ பிரவாகமாக வெளிப்பட்டது. இளைஞன் இரவு வீடு திரும்பினன்.

> படிப்பதையெல்லாம் உய்த்துணர்பவன் புத்திசாலி; அவன் நெற்றியில் இறைவ னின் திருவடிகளில் புகலிபெறத் தகுதி இருப்பதாக முத்திரை பதியும்; அவன் ஞானவானாகிறான். —குரு நானக்

ஆனால், விரைவிலேயே அவனை அறியாமல் ஓர் ஈர்ப்பு வலிமையினால் மீண்டும் பேலூர் மடத்திற்குச் சென்றான். அதுமட்டுமல்ல, தன் தீய பழக்கங்களையெல்லாம் துறந்து, சந்நியாசி யாக வேண்டும் என்ற உறுதியும் எடுத்துக் கொண்டான். வெகு விரைவிலேயே அது நிகழவும் செய்தது. சுவாமி பிரேமானந்தரின் அன்பு எதைத்தான் செய்யாது!

ஒரு நாள் பிரம்மசாரி ஒருவரை சுவாமி பிரேமானந்தர் கோபித்துக்கொண்டிருந்தார். அப்போது திடீரென அவருடைய உள்ளத்தில் தண்டனை கொடுப்பவருக்கும் வாங்கிக்கொள் பவருக்கும் இடையில் வித்தியாசம் ஏதும் இல்லாத அத்வைத நிலை ஏற்பட்டது. அது காரணமாக அவரது மனம் வெளியுலகத்தை விட்டுத் தம் உண்மைச் சொரூபத்தில் நிலைத்து நின்றுவிட, அனைவரும் வியந்து போற்றும் வகையில் அவர், ''இதென்ன பிரேமை, ஆனந்தம்; பார்த்தாயா அப்பா?'' என்றார். கோபம் நிறைந்த சூழ்நிலை மாறித் தெய்விக அமைதியே குடிகொண்டிருந்தது.

பக்தர்களுக்குச் செய்யும் தொண்டின் மூலமாக வும் சுவாமி பிரேமானந்தரின் பிரேமை வெளிப் பட்டது. மடத்திற்கு வரும் யாரும் பிரசாதமின்றி வெளியே போக முடியாது. ஒரு நாள் ஒருவர் பிரசாதமின்றி வெளியே செல்வதைக் கண்ட அவர் திருக்கோயில் சாமான்களின் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தவரைக் கேட்டார். அதற்கு அவர், ''அவர் கொஞ்சம்கூடக் காத் திருக்க மாட்டேன் என்கிறார். எப்படிப் பிரசாதம் கொடுப்பது?'' என்று பதில் கூறினர். மனம் வருத்தமுற்ற சுவாமி பிரேமானந்தர், ''அப்படி யானால் கூப்பிட்டுக் கொடுக்க வேண்டும். மடத்திற்குள்ளே அவர் வந்தாயிற்று அல்லவா? சம்சாரத்தில் இருந்தால் உன்னாலும் தின்ன முடியாது; குழந்தைகளுக்கும் கொடுக்க முடியாது, இங்கே பகவானுக்கு நிறைய வரு கிறது. அதை எடுத்துக் கொடுக்க முடிய வில்லையா?'' என்றார்.

